# கம்பன்-விசுவரூபம்

பழ. பழநியப்பன்





வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17

முதற் பதிப்பு : ஆகஸ்ட், 1983

12-8-83 சென்னைக் கம்பன் விழாவில்
நீதிபதி திரு. மு.மு. இஸ்மாயீல் அவர்களால்
வெளியிடப்பெற்றது.

இரண்டாம் பதிப்பு : ஆகஸ்டு, 1988

திருநாவுக்கரசு தயாரிப்பு

---

விலை : ரூ. 6-00

மாருதி பிரஸ்,
173, பீட்டர்ஸ் ரோடு,
சென்னை-600 014.

## ...இதோ, உங்கள் குழந்தை!

உங்கள் கரங்களில் இப்போது தவழ்ந்து கொண் ருக்கும் என் முதல் இலக்கியக் குழந்தையைப் ரசவித்தது ஓர் இனிய சுகானுபவம். கம்பனிடத்து ான் கொண்ட காதலே, இக் குழந்தை பிறக்கக் ாரணம். என் அநுபவம் எத்துணைச் சுகமானது ன்பதைக் கம்பன்மீது காதல் கொண்ட நீங்கள் அறி ர்கள். அதை நாம் இங்கு பகிர்ந்துகொள்ளத் தேவை ல்லை.

ஆனாலும், இக் குழந்தையை நீங்கள் கொஞ்சும் ன்னர், இதன் சுகப் பிரசவத்திற்குத் துணைநின்றவர் ளத் தெரிந்துகொள்ள வேண்டாமா?

என் மனத்துக்கினிய காதலன் கம்பனை எனக்கு றிமுகம் செய்த என் ஆசான்,

என் காதற் கம்பனை நான் நேசிக்கத் தடையாக இல்லாமல் தட்டிக்கொடுத்த என் தந்தை,

என் கம்பனை அறிமுகம் செய்த ஆசானிடத்து நான் செல்லப் பெரிதும் துணை நின்ற என் அண்ணன் மார்கள் மெ.நா.சித. சிதம்பரம், மு.மெ. முத்துராமன்,

என் மணாளன் கம்பனும் நானும் கூடிமகிழ்ந்து ஞ்சிக் குலாவ எங்களுக்கென்று ஒரு சோலை மைத்துத் தந்த என் ஞானத்தந்தை இஸ்மாயீல்,

என் காதற் சின்னத்தை நான் பெறுமுன்னரே பேர் டி மகிழ்ந்ததோடல்லாமல், இப்பேரில் இப்படி ஒரு

குழந்தையைப் பெறவேண்டுமென்ற ஆவலை என்னுள் வித்திட்ட கல்விக்கடல் எஸ். கே. இராமராஜன்,

என் இனிய ஒரு குழந்தை உங்கள் எல்லோருடைய கரங்களிலும் தவழும்வண்ணம் பலநூறாய் ஆக்கித் தந்த மாருதி அச்சகத்தார், அவர்க்குதவியாய் சிங்காரித்துச் சீர்ப்படுத்திய நண்பர் நா. சந்திரசேகரன், தம்பி த.கி. நீலகண்டன்,

என்னைக் குடல் விளக்கம் செய்த இக் குழந்தையை இன்று உங்கள் கரங்களில் தவழும்வண்ணம் வெளிக் கொணர்ந்த இலக்கிய வன்தொண்டர் வானதி திருநாவுக்கரசர்,

இவர்கள் மட்டுமா?

என் கண்மணிக்குப் பொட்டிட்டு, மையிட்டு. வண்ணப் பட்டுடுத்தித் தந்த கோபுலு,

என் அரிய குழந்தையை நீங்கள் கொஞ்சும் வண்ணம் தொட்டிலில் இட்டுச் சீராட்டித் தந்த அமைச்சர் பெருந்தகை ஆர்.எம்.வீ.

இவர்களும் இக் குழந்தைக்கு இனிய செவிலியர்.

இனி, இது உங்கள் குழந்தை. இக் குழந்தையை நீங்கள் கொஞ்சி மகிழும் அழகைக் கண்டு, நான் இன்னும் இதுபோல் பல குழந்தைகளைப் பெற வேண்டாமா?

12-8-'83

கற்பகச் சோலை''
சென்னை-85

—பழ. பழநியப்பன்

மாண்புமிகு இராம. வீரப்பன்
செய்தி அறநிலையத் துறை
அமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை 600 009
தேதி 7-8-'83

# அணிந்துரை

'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்' என்ற வழக்கு மொழி ஒன்று தமிழகத்தில் விளங்கிவருகிறது.

கற்பனையின் எல்லையில் நின்று, கம்பனைப் புகழ்வதற்கு இந்தச் சொற்றொடர் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் கம்பனைப் படிக்க ஆரம்பித்தால் ஒரு தத்துவ ஆய்வாளராகலாம் என்பதை நண்பர் பழ. பழனியப்பன் நிரூபித்துள்ளார்.

நூலாசிரியரே குறிப்பிடுவது போல், முதல் இலக்கியக் குழந்தையாக "கம்பன்—விசுவரூபம்" என்று பெயரிடப்பட்டுள்ள, அற்புதமான இக் குழந்தையை ஈன்றெடுத்துள்ளார்.

தமிழ்த் தென்றல் திரு.வி.க. அவர்கள் "இயற்கைப் பரிணாமம் கம்ப ராமாயணம்" என்று குறிப்பிட்டுள்ளார்கள். அதை விளக்குவதற்கு அருமையான ஒரு இலக்கியச் சுவையுள்ள நூலை நண்பர் பழ. பழனியப்பன் படைத்துள்ளார்.

மனிதன் எவ்வாறு மகாத்மா ஆகிறான் என்பதை கம்பனின் காவியப் படைப்பிலிருந்து அற்புதமாக ஆராய்ந்து இந் நூலை தமிழ் மக்கட்கு வழங்கியுள்ளார்.

பழ. பழனியப்பன் பார்ப்பதற்கும், பழகுவதற்கும், பேசுவதற்கும், இனிமையானவர். இனிமையான தமிழை கம்பன் தந்த தமிழை, ஆராயும்போது அவருடைய ஆராய்ச்சியும் இனிமை பெற்று இந்நூலே இனிமைச் சுவையுடன் திகழ்கிறது.

தமிழ் இலக்கிய உலகத்திற்கு புதிய படைப்பாளரை, இனிமையான நெறி வழுவாத எழுத்தாளரை, கம்பன் வழங்கியுள்ளான்.

உண்மையான மனிதக் குழந்தைகளைப் பெறுவதிலேதான் கட்டுப்பாடு வேண்டும், இலக்கியக் குழந்தைகளைப் பெறுவதிலே கட்டுப்பாடு இல்லை. தலைப் பிரசவம் போல், வருகிற பிரசவங்களெல்லாம் அருமையான இலக்கியச் செல்வங்களாகத் திகழட்டும்.

நண்பர் பழ. பழனியப்பன் அவர்களின் இலக்கியப் பணி சிறக்கட்டும்.

**இராம. வீரப்பன்**



கம்பனிடத்தும், கன்னித் தமிழிடத்தும்
மாறாத பக்தியும், தீராத காதலும் கொண்டு,
தன்னை மட்டுமேயன்றி, தன் பெயரையும்
கம்பன் அடிப்பொடியாய்
மாற்றிக் கொண்ட
என் ஆசானுக்கு

## நூல் நயம் நுகர்ந்தார் நுவன்றன
## ......ஒரு சில

நூல் பழகு தமிழில் அமைந்துள்ளது. மனிதனுடைய நல்ல நிலைக்கும் வளர்ச்சிக்கும் 'கம்பன் விசுவரூபம்' என்ற இந்த நூல் மிகுதியாகப் பயன்படும். மாணாக்கர்களுக்குப் பாடமாக வைத்தால் மிகவும் பயனாக அமையும்...

ச. வே. சுப்பிரமணியன்
இயக்குநர்,
*24-2-1984* உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்.

எளிய நடை; இனிய தமிழ்; ஏற்றமிகு சொல்லாட்சி; உயர்ந்த கருத்துக்கள்; உன்னதமான கட்டுக்கோப்பு; படிப்பார்கள் மனத்தில் பதியக்கூடிய வாசகங்கள்.

மொத்தத்தில் இது தங்களுக்கு ஒரு பெரிய வெற்றி

**M. S. சுந்தரம் பிள்ளை**
ஸ்ரீராம் பாப்புலர் சர்வீஸ்
*12-9-83* பாளையங்கோட்டை

தாங்கள் நூல் எழுதவில்லை. எங்கள் இதயத்தோடு பேசுகிறீர்கள்.

சடாயுவின் கண்—ஆராய்ச்சி எனக்கு உவப்பை அளித்தது.

நல்கினன் என்ற சொல்லை விளக்கியது, அறிஞர்களுக்கு விருந்து.

S. K. இராமராசன்

## பதிப்புரை

மாபெரும் காவியமான இராமாயணத்தைப் படைத்த கம்பனின் விசுவரூபத்தை மக்கள் எல்லோரும் தெளிவாகக் காணச் செய்கிறார் இலக்கியச் சுவைஞர் திரு. பழ. பழநியப்பன். தாம் அனுபவித்த கம்பன் கவி நயங்களையும், கம்பன் வடித்த கதாபாத்திரங்களின் குணச் சித்திரங்களையும் எடுத்துக்காட்டுவதோடு மட்டுமல்லாது கம்பன் காவியம் மக்களுக்கு என்ன புகல்கிறது; மக்கள் எப்படி வாழ வேண்டும்; எப்படி வாழ்ந்தால் மனிதன் மாமனிதனாக—மகாத்மாவாக—தெய்வமாக உயரலாம் என்பதைக் கம்பன் படைத்த பாத்திரங்கள் வாயிலாகவே நன்கு எடுத்துக் காட்டி கம்பன் பாடல்கள் முழுவதும் நாம் சுவைத்துப் படிக்கத் தூண்டுகிறார் இச்சிறு நூலின் மூலம்.

கம்பன் படைத்த பல்வேறு பாத்திரங்கள் மக்களுக்கு நீதியை எடுத்துக்காட்டி மக்களுக்கு நல்லது கெட்டது, சுக துக்கம், வரும் பொழுதெல்லாம் அவர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும், ஒருவருக்கொருவர் எப்படி உதவிக் கொள்ளவேண்டும் என்றும் கற்பிக்கின்றன.

'ஒரு கல்லில் இரு மாங்காய்' என, திரு. பழ. பழநியப்பன் இந்நூலைத் தமிழ் மக்களுக்கு வழங்கியுள்ளார். கம்பனின் இலக்கிய நயத்தை மட்டும் எடுத்துக்காட்டாமல் மக்கள் எப்படி வாழவேண்டும், எப்படி வாழ்ந்தால் மனிதன் மாமனிதனாக உயரலாம் என்ற வாழ்க்கை நெறிமுறை

களையும் வாழ்க்கை இலக்கணத்தையும் இச்சிறு நூலின் மூலம் கம்பன் வாயிலாகவே எடுத்து இயம்புகிறார். இந்நூல் ஒரு இலக்கிய நூல் மட்டுமல்லாது வாழ்வு முன்னேற்ற அறிவு நூலாகவும் திகழ்கிறது.

மக்களை உயர்த்துவதற்காக, எழுந்த முதல் நூலே திரு. பழ. பழநியப்பன் அவர்களைச் சிறந்த இலக்கியத் திறனாய்வு ஆசிரியராக, சிறந்த மனோதத்துவ வாழ்வு முன்னேற்ற ஆசிரியராக உயர்த்திவிட்டது.

இந்நூலுக்குச் சிறந்த அணிந்துரை அளித்துள்ளார்கள். செய்தி அறநிலையத் துறை அமைச்சர் மாண்புமிகு ஆர். எம். வீரப்பன் அவர்கள். இலக்கியத்தை ரசித்துப் போற்றும் உயர்திரு ஆர்.எம்.வீ. அவர்களின் அணிந்துரை நூலை அணிசெய்கிறது. அவர்களுக்கு நன்றி. இந்நூலை ஒப்புநோக்கி உதவிய திரு.நா. சந்திரசேகரன் அவர்களுக்கும் இந்நூலைத் துரிதமாக அச்சிட்டுக் கொடுத்த மாருதி அச்சக நண்பர்களுக்கும், இந்நூலுக்குச் சிறந்த முகப்போவியம் வரைந்துதந்த ஓவியர் திலகம் கோபுலு அவர்களுக்கும் நன்றி.

மக்கள் வாழ்வை உயர்த்தவும் கம்பன் கவிவளத்தை மக்கள் பருகவும் இந்நூலை எழுதிய திரு.பழ. பழநியப்பன் அவர்களுக்கு தமிழ் மக்களின் சார்பாக வானதி பதிப்பகம் பெருமையுடன் நன்றி செலுத்துகிறது.

ஏ. திருநாவுக்கரசு
வானதி பதிப்பகம்

The book is Quite interesting and I Congratulate you for your first attempt which you have done very well.

G. K. SUNDARAM
The Lakshmi Mills
Company Limited
Coimbatore

8.9-83

ஆர்வத்துடன் படித்து இன்புற்றேன்; இராமன் தான் செய்த தவற்றைப் பலர் அறிய ஒப்புக்கொள்ளல், 'இன்று போய்ப் போர்க்கு நாளை வா' என இராவணனிடம் கூறியபோது இராமனுக்கு இருந்த மனநிலை. 'சிறந்த தீயாள்' எனக் குறிப்பிடும்போது, சிறந்த என்ற சொல்லின் சிறப்பு, இராமன் கைகேயியின் பொருட்டுக் கேட்கும் வரங்கள் இவைகள் அனைத்தையும் தாங்கள் ஆராய்ந்து அனுபவித்துப் பெற்ற விளக்கங்களைப் பலரும் பெற்று இன்புறச் செய்யும் வகையில் தங்களுடைய அருமையான புத்தகம் அமைந்துள்ளது.

சி. வி. நரசிம்மன்
Director General of Police

*29-9-83*

இராமனின் மனிதப் பண்புகளின் வளர்ச்சி நூலில் அருமையாக விளக்கப்பட்டிருக்கிறது.

இரா. சுராஜ்
பாரதி கலைக் கழகம்
சைதாப்பேட்டை

"சென்றவிடத்தால் செலவிடாது தீதொஇரீ..." என்ற குறளை உங்களை வாயினால் கேட்கும்போது சில மனோ தத்துவ உண்மைகளைக் கண்டு நெகிழ்ந்தேன்.

*2-1-1984* டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி

# உள்ளுறை

# மனிதனின் விசுவரூபம் மகாத்மா

## தெரிந்த கேள்வி

உங்கள் எல்லோருக்கும் தெரிந்த ஒரு கேள்வி; கேட்டுப் பார்க்கலாமா?

'முக்கோடி வாழ்நாளும், முயன்றுடைய
பெருந்தவமும், முதல்வன் முன்நாள்
எக்கோடி யாராலும் வெலப்படாய்
எனக்கொடுத்த வரமும், ஏனைத்
திக்கோடும் உலகு அனைத்தும் செருக்கடந்த
புயவலியும் (9899*)

உடைய இராவணன்,

நாரதமுனிவற்கேற்ப நயம்படஇசைத்தஇராவணன்,

சங்கரன் கொடுத்த வாளுடைய இராவணன்,

மாதர் வலிய நெடும் புலவியினும் வணங்காத முடியுடைய இராவணன்,

ஈஸ்வரனுக்குச் சமமாக 'இராவணேஸ்வரன்' எனப் பட்ட இராவணன்.

ஏன் தோல்வியடைந்தான்?

கேள்வி கேட்பதற்கென்னவோ புதிராய்த் தோன்றினாலும் பதில் ரொம்ப சுலபமானது. இவ்வளவும்

---

* பாடல் எண்—சென்னைக் கம்பன் கழகப் பதிப்பை ஒட்டி அமைந்தன.

பெற்றிருந்த இராவணன் ஒன்றே ஒன்றை மட்டும் விட்டு விட்டான். எதனை? இதோ இராமன் சொல்கிறான்:

"இறப்பினும், திருஎலாம் இழப்ப எய்தினும்
துறப்பிலர் அறம் எனல் சூரர் ஆவதே." (1868)

துறக்கக் கூடாத ஒன்றாகிய அறத்தைத் துறந்த தாலேயே, எல்லாம் உடையனாகிய இராவணன் ஒன்றும் அற்றவனாகிவிட்டான்,

இராவணனிடத்தில் இருந்த படைபல பராக்கிரமம் தான் எவ்வளவு? சுற்றம், துணை, மூலபலம்; வில்லாளரை எண்ணில் விரற்குமுன் நிற்கும் இந்திரஜித் போன்ற பிள்ளைகள், கூற்றையும் ஆடல் கொண்ட கும்பகருணத் தம்பி, 'வரம்பெற்று வளர்ந்த தோளான்' மகரக் கண்ணன், குருதிக் கண்ணன், சிங்கன் போன்ற படைத் தலைவர்கள், 'ஒருவரைக் கொல்ல ஆயிரம் இராமர் வந்து, ஒருங்கே இருபதிற்றிரண்டு ஆண்டு நின்று அமர் செய்ய' வேணுமோ என்று வானவரே அஞ்சிச் சிவபெரு மானிடம் முறையிட்டமூலபல அரக்கர் படைவெள்ளம்— அடேய்யப்பா, இவ்வளவு பலமும் கொண்ட இராவணன் எங்கே?

"ஊனவில் இறுத்து, ஓட்டை மா மரத்துள் அம்பு ஓட்டி,
கூனி சூழ்ச்சியால் அரசு இழந்து, உயர் வனம் குறுகி
யான் இழைத்திட இல் இழந்து, இன் உயிர் சுமக்கும்
மானுடன்' (6179)

என்று இராவணன் பேசுமாப்போலே, வெறும் வில்லைத் தாங்கி, ஆயுதங்கள், படைக்கலங்கள் பிரயோகிக்கவே தெரியாத குரங்குகள் துணையோடு வந்த இராம— இலக்குவர்எங்கே?

அதனால்தான்,

'திரை கடையிட்டு அளப்ப அரிய வரம் என்னும்
பாற்கடலைச் சீதை என்னும்
பிரை கடையிட்டு அழித்தது' (9944)

என்று புலம்புவாள் மண்டோதரி.

இராவணன் வரத்திலும், ஆற்றலிலும் பாற்கடல் போன்றவன் தான். ஆனால் அந்த, அவ்வளவு பெரிய, அளப்ப அரிய, அருமை நிறைந்த பாற்கடலில், பிரை குற்றியதுபோல் பிறன்மனையாம் சீதையைச் சிறை யெடுத்தது ஆன அறம் துறந்த செயல்-ஒரே ஒரு துளி தான் என்றாலும் விஷம் விஷம்தானே! எவ்வளவு பாலானால் என்ன? இனி அது பாலாக இருக்க முடியாதே!

இப்போதுதான் இராவணனின் வீழ்ச்சியின்—மகோன்னதமான வீழ்ச்சியின்—நிலைமை புரியும். எந்த அறத்தைத் துறந்து இராவணன் அக்கிரமம் புரிந் தானோ, அந்த அறத்தை நிலைநிறுத்தவே காகுத்த வேடம் கொண்டு 'மேலொரு பொருளுமில்லா மெய்ப் பொருள் வில்லுந் தாங்கி, கால்தரை தோய நின்று கட் புலன் உற' இறங்கி வந்து அவதரித்தது.

## அவதாரம் ஏன்?

துஷ்டநிக்ரஹமும், சிஷ்ட பரிபாலனமுமே அவதார நோக்கம். எப்பொழுதெல்லாம் அதர்மம் தலைதூக்கி, தருமம் தழைக்கவில்லையோ, அப்பொழுதெல்லாம் "தர்ம ஸம்ஸ்தாபானார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே" என்றபடி அறத்தை நிலைநாட்ட அவதரிக்கிறது பரம் பொருள்.

''அறந்தலை நிறுத்தி, வேதம் அருள் சுரந்து அறைந்த நீதித்
திறம்தெரிந்து, உலகம் பூணச்செந்நெறி செலுத்தி, தீயோர்
இறந்து உகநூறி, தக்கோர் இடர் துடைத்து ஏக, ஈண்டுப்
பிறந்தனன்.'' (5885)

என்ற கம்பன் பாடலை மீண்டும் சொல்லிக் கொண்டே இருக்கலாம் போலிருக்கிறதல்லவா?

அறந்தலை நிறுத்துவது எப்படியாம்?

''தீயோர் இறந்து உகநூறி
தக்கோர் இடர் துடைத்து''

என்று என்ன தெளிவாய்வருகிறது கம்பனிடமிருந்து. பார்த்தீர்களா?

இதுதான் கம்பன் இராமாவதாரம் எழுதிய கதை.

''நடையின் நின்று உயர் நாயகன் தோற்றத்தின்
இடை நிகழ்ந்த இராமாவதாரப் பேர்த்
தொடை நிரம்பிய தோம் அறு மாக்கதை.'' (7)

சொற்கள் தவம் இருந்து, கம்பனிடமிருந்து பிறவிப் பேறு பெற்று வெளிவரும். ஆம், என்ன அழுத்தந் திருத்தமாய் வருகிறது, பாருங்கள் :

''நடையின் நின்று உயர் நாயகன் தோற்றம்.''

## இராமாவதாரச் சிறப்பு

இந்த இராமாவதாரத்தில் ஒரு தனிச் சிறப்புண்டு. தெய்வம் முழுக்க முழுக்க மனிதனாகவே வாழ்ந்து, மனிதன் தான் உய்வதற்கான நெறிமுறைகளை கடைப் பிடித்து, நாம் அதன் சொல்லை மட்டுமல்ல, செயலையும் பின்பற்றும்படியாக வாழ்ந்து காட்டிய அவதாரம் இராமாவதாரமே. கிருஷ்ணாவதாரத்திலோ கீதோப தேசம்தான் முக்யம்; சாரம்; கிருஷ்ணன் உபதேசித்த

படி சொன்னபடி வாழலாம்; ஆனால் அவன் வாழ்ந்த படி, செய்தபடி, நாம், வாழக் கூடாது; செய்யவும் முடியாது. கண்ணன் தெய்வமாகவே பிறந்தான். அவன் செயல்கள் தெய்வச் செயல்கள்; மனிதரால் பின்பற்ற இயலாதவை. இராமாவதாரத்திலோ அப்படி இல்லை. இராமனின் செயல்கள் அனைத்தும் மானுடச் செயல்கள்; அனைவரும் பின்பற்ற முடிந்தவை. ஏகபத்தினி விரதனாகவே இராமன் வாழ்ந்து காட்டு கிறான். உபதேசம் எதுவும் செய்யவில்லை. உதாரண புருஷனாகவே, புருஷோத்தமனாகவேவாழ்ந்து காட்டி விடுகிறான். யாவரும் பின்பற்றக்கூடிய வண்ணம் உயரிய ஒழுக்கங்களைக் கடைப்பிடித்து நடந்து காட்டுவதால் தான், 'நடையின் நின்று உயர் நாயகன்' கதை என்று கம்பன் குதூகலிப்பான்.

## இராமன் என்கிற மனிதன்

சகல வேதங்களின் பயனாக அறியப்பட வேண்டிய பரம் பொருள், முழுமுதற்பொருள் எதுவோ, அதுவே இறங்கி வந்து நம்மைப்போல் இராமன் என்ற மனுஷனாக வேஷம் போட்டுக்கொண்டு, அறத்திற்குக் கட்டுப்பட்டு, அப்படிக் கட்டுப்பட்டு இருப்பதிலேதான் ஆனந்தம் இருக்கிறது என்று காட்டிக்கொண்டு வாழ்ந்தது இராமாவதாரத்திலேதான்.

சிற்சில இடங்களில்—அகலிகை சாபம் நீங்கிய போது, சிவதனுசை முறித்தபோது, பரசுராமன் கர்வம் அடங்கியபோது என்று - தெய்வத்தன்மை மேலெழுந்து தோன்றினாலும், அதைத் திறமையாக மறைத்துக் கொண்டு உலகத்தவர் தன்னை மனிதனாகவே நம்பும் படி முயன்று வாழ்கிறான் இராமன். அப்பழுக்கே இல்லாத ஒரு மனிதனைக் காட்டி இருந்தால் நாமும்

நம்பியே இருக்க மாட்டோம். எல்லா நல்ல குணங்களும் பொருந்திய மனிதன் ஒருவன் வழுக்கித் தடுமாறுகிற போதுதான், அடடே இவன் ஒரு மனிதன்தான் என்கிற உணர்ச்சி நம்மிடம் உண்டாகும். அந்த உணர்ச்சியை உண்மைப்படுத்தவே மேலோட்டமாகப் பார்த்தால் வசைதரக்கூடிய வாலி வதையையும், இராமன் என்கிற மனிதன் செய்கிறான்.

### மனிதனாகப் பிறந்தது ஏன்?

அப்படிப்பட்ட பரம்பொருள் மனித குலத்திலே அவதரித்ததாலேதான் சுக்ரீவன் வாயிலாகக் கம்பன் சொல்வான்:

"ஆறுகொள் சடிலத்தானும், அயனும் என்று இவர்கள் ஆதி
வேறு உள குழுவை எல்லாம், மானுடன் வென்றது."
(3804)

வேறு உள குழு எவை? தேவர், இயக்கர், அரக்கர், விலங்கு, பறவை. இதிலே அரக்கர் குழுவில் அவதரிக்க முடியாது. ஏனெனில் 'அரக்கர்கள் அளவு அற்றார்கள்' அதனால் அவர்களை வருக்கம் தீர்க்கவே அவதரிக்க வேண்டும். தேவரில் அவதரித்திருக்கலாமே என்று கேட்கலாம். இதோ தண்டக வனத்து முனிவர்கள் பளீரென்று நெஞ்சில் அடித்தாற்போலச் சொல்லுவதைக் கேளுங்கள்;

"இந்திரன் என்னின், அவன் அரக்கர் ஏயின
சிந்தையில், சென்னியில் கொள்ளும் செய்கையான்"
எந்தை! மற்று யார் உளர் இடுக்கண் நீக்குவார்?" (2645)

அரக்கர் ஏவுவதை சிந்தையிலும் சென்னியிலும் கொண்டால் மட்டும் பரவாயில்லையே. இன்னபோது இராவணன் இவ்வழி நோக்குவான் என்பதும் தெரியாத

தால், எப்போதும் தலையில் கரம் சுமந்துகொண்டு அருகிலிருக்கும் மங்கையர்களிடம் ஏதாவது மாற்றம் கூறினாலும் தங்களை ஆம் எனத் தாழும் சென்னியராய் வாழ்ந்துவரும் இயக்கர், தேவர் குழுக்களிலா கடவுள் வந்து அவதரிப்பான்? அதனாலேயேதான் மனிதனாகப் பிறக்கிறான். மனிதனாகப் பிறந்தது மட்டுமல்ல; முழு மனிதனாக - நாம் எல்லாரும் என்றைக்கும் கடைப் பிடிக்க வேண்டிய, கடைப்பிடிக்கக்கூடிய அறங்களை - வெறும் உபதேசமாகச் செய்து விட்டுப் போகாது, தானும் கடைப்பிடித்து, வழிகாட்டி நம்மைப் போன்றோரும் பிறரும் தன்னைப் பின்பற்ற வேண்டும் என்கிற பாதிப்பை ஏற்படுத்திச் சென்ற அவதாரம் இராமாவதாரம்.

## மனிதனாக வாழ்ந்தாலே மகாத்மா ஆகலாம்

இராமன் வாழ்ந்து காட்டியபடி நாம் வாழ்ந்தால், மனிதகுலம் உய்வதற்கு வேறு உபாயமே வேண்டா. அந்த வழியில், இராமன் காட்டிய வழியில் நடந்தால், நாம் இன்றைக்கும் எவ்வளவோ அமைதியாய், ஆனந்த மாய் இருக்கலாம். ஒவ்வொரு தனிமனிதனும் ஆனந்த மாக வாழ்ந்தால், உலகம் தானாகவே ஆனந்தமயமாகி விடாதா? இன்று நாம் காணும் இத்துணைப் பூசல்களும், பகை உணர்ச்சிகளும் இருக்காது. பரிபூரண அமைதியும், சமாதானமும் நிலவி உலகமே ஒரு அன்புப் பூங்காவாய்ப் பூத்துக் குலுங்கும். எப்படி என்கிறீர்களா?

வள்ளுவன்தான் இலக்கணம் வகுத்துச் சொல்லி விட்டுப்போயிருக்கிறானே!

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.''

எப்படி? வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தால் மனிதனாகப் பிறந்தவன், வாழவேண்டிய முறைப்படி நெறிப்படி வாழவேண்டும். சரி, அப்படி வாழ்ந்தால்? மனித நிலையிலிருந்து மகாத்மாவாக உயர்ந்து தெய்வ மாகி விடலாம். ஆக, மனிதன் மகாத்மாவாக ஆவதற்கு வாழ்வாங்கு வாழவேண்டும், இல்லையா? சாதாரண மனிதன், நம்மைப் போன்ற சராசரி மனிதன் மகாத்மா வாக விசுவரூபமெடுப்பதா? முடியுமா? வாழ்வாங்கு வாழ்ந்தால் நிச்சயம் முடியும் என்பதால்தானே "தெய்வத்துள் வைக்கப்படும்" என்று அடித்துச் சொல்கிறான் தெய்வமாக்கவி வள்ளுவன்.

## மனிதனும் விசுவரூபம் எடுக்கலாம்

மனிதன் மகாத்மாவாக வளர்வது, விசுவரூபமெடுப் பது எப்படி என்று காட்டுவதுதான் கம்பனின் இராமாவ தாரம்.

"பொய்யில் கேள்விப் புலமையினோர் புகல்
தெய்வமாக் கவி (வள்ளுவன்) மாட்சி தெரிக்கவே! (6)

இராமகாதையைத் தான் இயம்புவதாகக் கம்பன் பாயிரத்திலேயே வாக்குமூலம் சொல்லிவிடுகிறானே!

விசுவரூபம் என்பது பேருருவம் ஆகும். புராணங் களிலும், இதிகாசங்களிலும் கடவுளர் விசுவரூப தரிசனம் தந்ததாக நாம் அறிவோம். ஆனால் விசுவரூபம் என்பது ஓர் உருவத்தோடுதான் இணைந்திருக்க முடியும், வேண்டும் என்ற தேவை இல்லை. ஒரு மனிதனுடைய உடல் அல்ல, உள்ளமும் விசுவரூபம் - பேருருவம் எடுக்க முடியும். எப்படி என்கிறீர்களா?

சாதாரண ஒரு மனிதன் அன்பினால் உலகம் முழுவதையும் ஆள முடியும்; உலகத்தின் ஜீவராசிகள்,

படைப்புக்கள் அனைத்தையும், "காக்கை குருவி எங்கள் ஜாதி" என்றபடி, நேசித்தால், நெஞ்சம் நிறைந்த அன்பால் அவற்றை ஆகர்ஷிக்க முடியும்.

அன்பு என்கிற இயற்கையான உணர்வு எல்லாரிடத்தும் அமைந்திருக்கிறது. தன் துன்பத்திற்காகக் கண்ணீர் விடுகிற விலங்கு, பறவைகளிடமிருந்து, மனிதனைப் பிரித்துக் காட்டுவதே பிறர்மீது கொண்ட அன்பால், மனிதன் பிறர் படும் துன்பத்திற்காகக் கசிந்துருகுவதால் தான். அன்பு பெருகப்பெருகத் தன்னலம் குறைகிறது. 'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' அல்லவா? எல்லார்மீதும் எதன் மீதும் அன்பு செலுத்தச் செலுத்த, எல்லாரும், எல்லாமும் அவனை நேசிக்கத் தொடங்கும். அதற்கு உதவும் அன்பு ஒன்றுதான் அகத்துறுப்பு, மனிதனுக்குள்ளே இருக்கிற உன்னதமான உறுப்பு. அந்த உள் உறுப்பினால் அவன் தன் நிலையை உயர்த்திக் கொள்ள முடியும்.

உடம்பு தான் இருக்கிற நிலையிலிருந்து கனபரிமாணத்தால் பெரிதாக வடிவம் எடுத்தால் அது விசுவரூபமாகும். அதாவது புறத்தோற்றத்தில் காணப்பெறும் வளர்ச்சியைக் கொண்டே, உருவத்தின் பேரளவைக் கொண்டே, விசுவரூபம் என்கிறோம். அப்படியானால் உள்ளமும் விசுவரூபம் எடுக்க எது வளரவேண்டும்? அது தான் மனிதனின் உடம்பிற்குள் இருக்கும் உள் உறுப்பாகிய அன்பு. அந்த உறுப்பாம் அன்பு தன் வடிவத்தை, அதாவது தன் ஆதிக்கத்தை அதிகப்படுத்திக்கொண்டே போனால், அதுவே அன்பு வளர்ந்து பேருள்ளம் வடிவெடுத்ததாகும்.

அந்த உள்ளத்து உறுப்பாகிய அன்பை எல்லார் மீதும் எல்லாவற்றின் மீதும்—ஏன் உலகம் முழுமையும்

செலுத்தினால், உலகமே வசப்படும் வித்தை நிகழும். ஏனெனில் அன்புக்குக் கட்டுப்படாத வஸ்துவே இல்லை. அப்படி உலகமே வசியமானால், உலகமே உள்ளத்துள் அடக்கமாகி விட்டால், அது தானே உள்ளம் வேண்டும் போது தன் பேருருவம், விசுவரூபம் மீண்டும் எடுக்க ஏதுவாகிறது.

**கம்பன் என்றொரு விசுவரூபன்**

கம்பன் ஒரு விசுவரூபன்தான். 'உலகம் யாவையும்' என்று தன் காப்பியத்தைத்தொடங்குகிறபோதே அவன் உள்ளத்தின் ஆழ, அகலம் நமக்குத் தெரியவில்லையா? அவன் சரணம் சொல்லுகிற இறைவன் எந்த ஒரு குறிப் பிட்ட இனத்தாருக்கோ, சமயத்தவர்க்கோ, நாட்டி னர்க்கோ சொந்தமானவன் அல்லனே! எல்லோராலும்-ஆம் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளக்கூடிய குணங் களைக்கொண்ட ஒரு இறைவனிடத்திலேதான் தலைவனிடத்திலேதான் சரணடைகிறான்.

சாதாரணமாக யாரும் தம் இஷ்ட தெய்வத்தை-வழிபடு தெய்வத்தைத் துதித்து, காப்புக் கூறித்தான் தொடங்குவார்கள். அது ஒரு நிலை. ஆனால் கம்பன் உலகமாகவி, கவிச்சக்கரவர்த்தி, அவன் நிலை வேறு. இனம், சமயம், நாடு என்ற குறுகிய எல்லைகளை எல்லாம் தாண்டி உயரப்போய், ஆம், நாம் அண்ணாந்து பார்க்க வேண்டிய உயர்ந்த உயரத்திற்கே போய், உலகளந்த பெருமான்போல, வரம்புகள் அனைத்தையும் மீறி, அனைத்திற்கும் அப்பாற்போய் இந்த உலகம் அல்ல உலகங்கள் யாவற்றையும் தன் அன்பால் நேசங்கொண்டு உறவாடி, அவற்றின் தலைவனை வணங்குகிறான். எந்த உருவமும், பெயரும் கூறாது, ஒரு தனிப் பெரும் பொருளை, திணை, பால், எண், இடம் எதுவும் சுட்டிக் காட்டாமல் வணங்குகின்றான்.

அந்த 'யாவையும், என்ற சொற்பிரயோகத்தில் இருக்கிற சுகம் இருக்கிறதே அதை அனுபவித்தால்தான் தெரியும். எங்கே 'எல்லாம்' என்று போட்டுப் பாருங்கள், அந்த பாவம் கிடைக்காது. 'யாவையும்' என்றாலும், 'எல்லாம்' என்றாலும்,பொருள் வேறுபடாது என்றாலும், 'யாவையும்' 'என்கிற தொனியே - வேறு. மறுபடியும் சொல்லித்தான் பாருங்களேன். இப்படிக் காப்பியத்தைத் தொடங்குவதிலேயே கம்பன் தன்னை ஒரு விசுவரூபியாக இனங்காட்டிக் கொண்டுவிடுகிறான். இன்னும் காப்பியத் திற்குள்ளே நுழைந்தால் அவன் காட்டுகிற விசுவரூப உள்ளத்தின் மகத்தான அருமை நம்மை மெய்ம்மறக்கச் செய்துவிடும்.

### விசுவரூப சாதனம் இராமகாதை

அந்தக் கம்பன் என்கிற மாபெரும் கவிஞன் விசுவரூப மெடுக்க உதவுகிற சாதனமே இராமகாதை.

சங்க காலத்திற்கு முன்பிருந்தே இராமகாதை தமிழ் மக்களின் மனத்தைக் கவர்ந்துள்ளது. அகநானூறு, புறநானூறு, சிலப்பதிகாரம் இவை எல்லாம் இராமகாதை நிகழ்ச்சிகளை எடுத்துச் சொல்லும். சிலப்பதிகாரக் காலத்திலும், ஆழ்வார்கள் காலத்திலும் இராமன் கதை திருமால் அவதாரக் கதையாகக் கருதப் பெற்றமை தெளிவாகும்.

'அறம் வெல்லும், பாவந்தோற்கும்' என்ற உண்மையை உணர்த்த இராமகாதை சிறந்ததொரு சாதனமே என்று கருதியதோடு, வான்மீகி வழங்கினா லும், தமிழகத்தில் மக்கள் உள்ளங்களில் ஆழங்காற்பட்டு விட்ட கதையையே தன் காவியத்திற்கு வித்தாக எடுத்துக்கொள்ளுகிறான். அந்த கதைக் கரு ஏற்கனவே காலத்தை வென்று நின்றிருப்பதை அவன் பரிபூர்ணமாக

உணர்ந்து தான் அதனை எடுத்தாண்டிருக்கிறான். தன் காலத்திலேயே காலத்தை விஞ்சி நிலை நின்று வழங்கி வரும் ஒரு கதைக் கருவே, இனியும், எதிர்காலத்திலும் காலத்தை வென்று என்றும் நின்று நிலவும் என்று உணர்ந்தே, இராமகாதை என்ற பட்டை தீட்டப் பெறாத வைரத்தை முழு மணியாக்கித் தருகிறான். இந்த சிரஞ்சீவித் தன்மை நிறைந்த கருவைக் கொண்டு தான், தன் மனத்தைப் பெரிதும் ஈர்த்து நின்ற வான் புகழ் வள்ளுவத்திற்கு இலக்கியமாக்கிக் காட்ட விசுவரூபம் எடுத்திருக்கிறான்.

**'ஓவியக் கவிதையால் காவிய விசுவருபம்'**

இராமகாதை என்ற சாதனத்தை ஏவத்துக் கொண்டு கம்பன் காவிய விசுவரூபமே காட்டுவதாக அமரர் கம்பன் அடிப்பொடி அழுத்தந் திருத்தமாகச் சொல்வதை முதலில் பார்ப்போம்.

''ஓவியக் கவிதைக் குள்ளே உலகெலாம் அடங்கு மாறும்
பூவியல் பொருள்கள் யாவும் புலப்படு மாறும் மேலாம்
காவிய விசுவ ரூபம் காட்டிய கம்ப நாடன்
சேவடிக் கமலப் போதைச் சென்னியிற் சூடி வாழ்வோம்''

கம்பநாடன் காவிய விசுவரூபத்தை எப்படிக் காட்டு கிறானாம், தெரியுமா?

'ஓவியக் கவிதையின் மூலமாக'

'இந்த உலகப் பொருள்கள் யாவற்றையும் புலப்படுத் தும் ஓவியக் கவிதையின் மூலமாக'

'இந்த உலகப் பொருள்கள் யாவும் மட்டுமல்ல, உலகங்கள் எல்லாவற்றையுமே தன்னுள் அடக்கிக் காட்டும் ஓவியக் கவிதையின் மூலமாக'

கவிதையின் மூலமாகக் காவியவிசுவரூபம் காட்டு கிறான்கம்பநாடன். அதென்ன 'ஓவியக் கவிதை!' ஆங்கிலத்தில் ஒருவழக்கம் உண்டு. ஓவியத்தைப் பேசாப் பாட்டு (Dumb Poetry) என்பார்கள் பாட்டைப் பேசும் ஓவியம்(Speaking Painting)என்பார்கள்.பாட்டைப்பேசும் ஓவியமாகக் கம்பன் வடித்துத் தருகிறான். ஓவியத்தின் சிறப்பு என்ன? என்றும் ஒரே மாதிரியாக இருக்கும் தன்மையுடையது. கால அளவுக்குக் கட்டுப்படாதது. கம்பனே சொல்லுவான் : 'சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை'யைப் போன்ற முகம் என்று. 'மலர்தலும் கூம்பலும் இல்லாது என்றுமே அலர்ந்துள்ளது ஓவியத்துத் தாமரை. என்றும் இன்பம் பயக்க வல்ல கவிதையையும் 'ஓவியக் கவிதை' என்பதால் கால அளவைக் கடந்து நிலைத்து நின்று இன்பம் பயக்க வல்லது, கவிதை என்பது பெறப்படும்.

அப்படிப்பட்ட 'பேசும் ஓவியத்'திற்குள்ளே நாம் அறிந்த இந்த உலகத்திலுள்ள உயிர்ப் பொருள்கள் மற்றும் உயிரற்ற பொருள்கள் எல்லாம் புலப்படுத் தினானா கம்பன்?

**''பூவியல் பொருள்கள் யாவும்''**

''அறிவுடையார் எல்லாம் உடையார்'' என்று பேசு வான் வள்ளுவன்.

''எல்லாம் உடையார்'' என்றால் எவை எல்லாம் உடையார்?''

''எல்லாவற்றையும் உடையார்.''

''எல்லாம் என்றால் என்ன?''

''எல்லாம் என்றால், எல்லாம்தான்''.

இப்படித்தான் என்னைப் போன்றவர்களால் பதில் சொல்ல முடியும். இதோ கையில் கட்டிள்ள இந்தக் கடிகாரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். என்னால் இதை அக்குவேறு, ஆணி வேறாகக் கழற்றிப் பிரித்து வைக்க முடியும். ஆனால் அந்த சாமான்களையே கொண்டு மீண்டும் அதைக் கடிகாரமாக்கி ஓடவைக்க என்னால் முடியாது; தெரியாது. அப்படிச் செய்ய வேண்டுமானால் எனக்கு அந்தத் துறையில் அறிவு வேண்டும். அறிவுடைய ஒருவன் பத்தே நிமிடங்களில் மறுபடியும் ஒரு கடிகாரத்தை ஓட வைக்க முடியும். ஆனால் அந்த அறிவில்லாத என்னைப் பொறுத்தவரை அவை வெறும் தகரத்துண்டுகள்தாம். என்னைப் பொறுத்தவரை அவற்றின் மதிப்பு "காயலான் கடை மதிப்புத்தான். அதே பொருள்கள் ஒரு கடிகாரத் தொழிற்சாலையிலிருந்து சேர்க்கப்பட்டு வந்தால் அதன் மதிப்பு நூற்றுக்கணக்காக மாறும். ஆகவே, அறிவுடைய வர்களுக்கு எல்லாமே மதிப்புடையவை. எல்லாம் அவர் கள் உடைமையாகும்."

இந்த அறிவையும் பல துறையிலும் கூர்மையாக வைத்துக் கொள்ளுகிறவர்கள் உண்டு. ஒரு வக்கீல் கவி ஞராகவும் இருக்கலாம். ஒரு மருத்துவர் சிறந்த எழுத் தாளராகவும் இருக்கலாம். சாதாரணமாக மனிதர் கள் ஒரு துறையிலே மேதைகளாக இருக்கலாம். ஆனால் தொட்ட தொட்ட துறையெல்லாம் மேதாவிலாசம் உடையவராக ஒருவர் இருக்க முடியுமா? அப்படியுள்ள ஒருவரைச் சுட்ட நினைத்தால் முதலில் முன் நிற்பவன் கம்பன்தான். கற்பனைத் திறமா? அதில் கம்பன் கவிஞரில் ஓங்கிய கலைஞன். நாடக அணியா? அதில் அவன் நிகரற்றவன். இப்படியே வளமார் சந்தமா, சுவை நயமா, பொருள் ஆழமா, தத்துவச் செறிவா,

இலக்கண முறையா, அலகில் ஞானமா, இயற்கை வருணனையா, அரசியலா எதை எடுத்தாலும் அவை யனைத்திலும் முறை போகியவன் கம்பன். கம்பநாடன் "கவிதையிற்போல் கற்றோருக்கு இதயம் களியாதே' என்று சும்மாவா சொல்லுவார்கள்?

தத்துவ விளக்கம் தருகிறபோது கம்பனை நாம் ஓர் கவிஞனாகவே எண்ணத் தோன்றாது. தலைமைசான்ற தத்துவஞானிதான் அகக் கண்ணிலே தோன்றுவான். அழகை வருணிக்கிறபோது பரமரசிகனைத்தான் பார்க்க முடியுமே தவிர, கம்பன் என்ற கவி தெரியமாட்டான். அரசியல் நீதி புகலும்போது பெரும் அரசியல் ஞானி தான் தோன்றுவான். நகரத்தை வருணிக்கிறபோது பெரிய கட்டிடக் கலை நிபுணரும், அரிய பொறியியல் நிபுணருமே தெரிவார்கள். மர யானையில் மரத்தைப் பார்க்கிறவர்களுக்கு மரம் மட்டுமேயும், யானையைப் பார்க்கிறவர்களுக்கு யானையே தெரிவது போலவும் தான் கம்பனை ரசிகனாகப் பார்க்கிறவர்களுக்கு அவன் பரம ரசிகன்; வீரனாகப் பார்க்கிறவர்களுக்கு அவன் பெருவீரன்; ஞானியர்க்கு அவன் ஞான ஒளி; கவிஞர் களுக்குள் அவன் கவிச்சக்கரவர்த்தி. அந்தச் சக்கரவர்த் தியின் கருவூலத்திலிருந்து அவன் புலப்படுத்தும் பூவியல் பொருள்களை நாம் பார்க்கலாமா?

அரக்கர் பாவமும், அல்லவர் இயற்றிய அறமும் துரக்க, கேகயன் பயந்த நங்கை, நல்லருள் துறக்கும் நாடகம் நிகழ்கிறது. இன்னல் செய் இராவணன் இழைத் தீமைபோல் தோன்றிய கூனி சிறிது சிறிதாக 'இராமனைப் பயந்த எற்கு இடருண்டோ?' என்று இறு மாந்து கேட்ட 'ஆழ்ந்த பேரன்பின' ளான கைகேயியின் மனத்துக்குள்ளே ஒரு விரிசலை—எரிமலை வெடிப்பதற்கு

முன்னே உள்ள சில மாறுதல்கள் நிகழுவது போல— ஏற்படுத்திவிடுகிறாள். இராமனைப் பயந்தவள் "என் மகன்" என்று பரதனைப் பேசத்தலைப்படுகிறாள். அப் போது கேட்கிறாள் :

"மயில்முறைக் குலத்துரிமையை,
மனுமுதல் மரபை,
செயிர் உற, புலைச்சிந்தையால்,
என் சொனாய்?" (1470)

அரச பரம்பரையின் வாரிசு மூத்த குமாரனுக்கே என்ற மனுவின் காலத்து மரபை மாற்ற உன் சிறு புத்தி யால் நினைக்கிறாயே என்று கேட்க வந்த கைகேயி 'மயில் முறைக் குலத்துரிமை'யை மாற்றலாமா என்றும் கேட் கிறாள். அதென்ன மயில் முறைக் குலத்துரிமை? அவள் பிறந்த கேகய நாடு, மயில்கள் நிறைந்த நாடு. அவர் களுடைய குலத்துக்கு உரிமை—வாரிசுச் சட்டம்—'மயில் முறை'ப் படியாம் என்று பேசுகிறாள். மயில்முறை என்ன என்று தெரிய வேண்டுமானால் மயில்களைப் பற்றித் தெரிந்திருக்க வேணும். மயில்களுக்குள்ளே ஆண் மயில், பெண் மயில் உண்டென்ற சாதாரண உண்மையை நாம் அறிவோம். ஆனால், சில மயில்களுக்குத் தலையில் கொண்டை இருக்கும். அவை எவை?

ஆண் மயில்கள்தாம் கொண்டையுடையவை என்றாலும், எல்லா ஆண் மயில்களுக்கும் கொண்டை இருக்காது. முதல் ஆண் குஞ்சுக்கே தலையில் உயர்ந்த கொண்டை இருக்குமாம். 'கலாவம் புனைந்த களிமயில் மூத்தது' எனத் தணிகைப் புராணத்திலே ஒரு குறிப்பு கிடைக்கிறது இதற்கு. இன்றைய விலங்கியல் நிபுணர்கள் இதை ஒப்புக்கொள்கிறார்கள். இதைத்தான் 'கல்வியிற் பெரிய கம்பன்' அன்றே சொல்லுகிறான், 'மயில்முறை'

என்று. மயில் முறைக் குலத்துரிமை என்பதற்கு கேகய நாட்டையே மயில் நாடு என்று அழைக்கப்படும் வழக்காறு உண்டாதலால், கேகய நாட்டு அரசுரிமை முறை என்று சிலர் உரைக்கலாம், ஆனால், அப்பொருள் சிறப்புடையதன்று எனக் கம்பனில் பல்காலும் பயில்பவர்கள் அறிவார்கள். கம்பனுக்கு மயிலைப்பற்றித் தெரிந்திருக்க வேண்டும். ஆண் மயிலைப் பற்றியும் தெரிந்திருக்க வேண்டும். அதிலும் கொண்டையுடைய மயிலே மூத்தது. அதுவே முறைமையுடையது என்பதுமான மிக நுண்மையான விலங்கினத்து உண்மையையும் அறிந்திருக்க வேண்டும். இல்லையேல் சாதாரணமாக யாரும் அறிந்திராத இந்த அசாதாரணமான நுட்பமான பொருளைக் கைகேயியை வைத்துப் பேசியிருக்க முடியாது. இராமனே மூத்தவன். அவனே அவளுடைய புகுந்த வீட்டு—மனு தர்ம முறைப்படியும் பிறந்த வீட்டுக் கேகய நாட்டு—மயில் முறைப்படியும் பட்டஞ் சூட்டிக் கொள்ள உரிமையை உடையவன் என்றும் கைகேயியின் மனத்திலே இருந்த எண்ணத்தைக் கம்பன் அழகாக வெளிப்படுத்துகிறான். அரசரில் பிறந்து அரசரில் வளர்ந்து அரசரில் புகுந்து பேரரசியானவள் கைகேயி. பிறந்த இடத்து மரபையும் புகுந்த இடத்து மரபையும் விட்டுக்கொடுக்க எண்ணாதவளாகக் கைகேயி இருந்த நிலைமையை எடுத்துக்காட்ட கம்பன் சொல்லுகிற மயில் முறை நயம் பன்முறை துய்த்து உணர வேண்டிய தொன்றாகும்.

* * *

திருமால் அன்று தன் நெடுமையால் அளந்த உலகையெல்லாம், தன் மனத்தே நினைந்து செய்த கொடுமையால் அளந்த தன்மையுடைய கைகேயியின் சொற்கொண்டு இராமன் வனம்புகப் புறப்படுகிறான்.

தன்னுடன் கூட வருவேன் என்ற இலக்குவனைத்தடுத்து நிறுத்துகிறான் இராமன். இலக்குவன் இதற்கு ஒப்பாது தன் வேண்டுகோளை வலியுறுத்திச் சொல்கிறான்.

'நீர்உள எனின் உள, மீனும் நீலமும்;
பார் உள எனின் உள யாவும்; பார்ப்புறின்,
நார் உள தனு உளாய்! நானும் சீதையும்
ஆர் உளர் எனின் உளம்? அருளுவாய்!'' (1757)

என்றான்.

நீரைவிட்டுப் பிரியாத, பிரிந்தால் உயிர் தரியாத வஸ்துக்கள் இரண்டு. அவை மீனும், நீலோற்பல மலருமாகும். தண்ணீரினின்று தரையில் போட்டால் உயிர் தரிக்காத மீனைத் தனக்குவமையாகவும் நீரை விட்டுப் பறித்தவுடன் வாடிவிடும் நீலமலரைச் சீதையாகவும் இலக்குவன் பேசுவதாகக் காட்டுகிறான் கம்பன். இது ஏதோ சாதாரண விவாதப் பேச்சோ, அல்லது வெறும் உவமையாகவோ தோன்றவில்லை. கம்பன் தன் காவியக் கோவிலின் விமானத்தின் உச்சியிலிருக்கும் சிற்பத்தையும் சரி, வாயிற்படியாய்க் கிடக்கும் கல்லையும் சரி கலையழகும், காவிய நயமும் மிளிரவே படைக்கின்றான். இங்கேயும் அவன் தனது விலங்கியல் அறிவையும் தாவரவியல் ஞானத்தையும் காட்டுகிறான். எத்தனையோ ஜீவராசிகளுள் இமையே இல்லாத ஒன்று மீனாகும். ஆம். மீன்களுக்கு இமை கிடையாது. பின்னாலே வனத்திலே, பதினான்கு ஆண்டுகள் கண் இமைக்காது, தூங்காமல் இராமனைக்காக்கப் போகிறான் இலக்குவன். அதனாலே 'இமைப்பிலன் நயனம்', 'துஞ்சலில் நயனத்தான்' என்றெல்லாம் பாராட்டுப் பெறப்போகிறான். அப்படிப்பட்டவனுக்கு உவமையாகக் கூற இமையே இல்லாத நயனங்களை

உடைய மீனைக் கூறியது எவ்வளவு பொருத்தம்! அது மட்டுமா? நீரிலே இருக்கிற அழுக்கு, கழிவுப்பொருள்கள், இவைகளை உண்டே வாழும் மீன். அதேபோல் இராமன் உண்ட எச்சில் கனி, கிழங்குகள், மிச்சம் மீதியையே உண்டு பின்னே வனத்திலே வாழப்போகிறவன் இலக்குவன். அந்த வகையிலும் உவமை கூற மீனே சாலப் பொருத்தம். கம்பன் சைவனோ அன்றி அசைவனோ என்று நாம் அறியோம். என்றாலும் சாதாரணமாக நாம் யாரும் பார்க்கும்படியான ஒரு ஜீவராசி மீன். அதில் நாம் யாரும் கவனிக்கத் தவறும் ஒரு நுண்மையான விலங்கியல் சிறப்பை வைத்துக்கொண்டு ஒரு பாத்திரத்தின் குண நலத்தையே விளக்கிக்காட்டக் கூடியவன் கம்பன் ஒருவன் தான். இப்படி ஒரு சாதாரண மீனைப்பற்றி மட்டுமா, காணக் கிட்டவாராத ஒன்றையும் கம்பன் தன் கலையழகோடு விளக்குவான். சிறிய மீனுக்கடுத்து, பெரிய கழுகையும் பார்க்கலாம்.

* * *

சிற்றிடைச் சீதையுடனும், இளவலுடனும் இராமன் வனம் புகுகின்றான். அவர்கள் மூவரும் நடந்து வருவதைத் தூரத்தே மலை முகட்டிலிருந்துகொண்டு புள்ளினத்து வேந்தன் சடாயு கவனிக்கிறான். கம்பன் காப்பியத்தில் சடாயு அறிமுகமாகிற இடம். இதோ கம்பனின் அறிமுகம்.

'தூய்மையன், இருங்கலை துணிந்த கேள்வியன்,
வாய்மையன், மறுஇலன், மதியின் கூரமையன்,
ஆய்மையின் மந்திரத்து, அறிஞன் ஆம் எனச்
சேய்மையின் நோக்குறு சிறு கணான் தனை' (2694)

சடாயுவின் குண நலன்களை விவரிக்கப் புகுந்த கம்பன் கல்வி கேள்விகளிற் சிறந்த, குற்றமற்ற, கூர்த்த

மதிவலியும், வரும் பொருளுரைக்கும் ஆர்த்த அமைச்சியல் அறிஞனு மாகிய சடாயு தூரத்தை நோக்கியிருக்கிற சிறு கண்களையுடையவன் என்கிறான். சிறு கண்ணாலே தூரக் காட்சியைப் பார்க்க முடியுமா? கம்பன் எவ்வார்த்தையையும் தேவையின்றிப் பிரயோகிக் கிறவன் அல்லன். 'சிறு கணான்' என்பதில் ஏதோ மறை பொருள் இருக்க வேண்டும். இல்லையேல் 'சேய்மை' என்ற அழுத்தம் கொடுத்து 'சிறு கணான் என்ற பிரயோகம் செய்ய மாட்டான்.

அவனுக்குக் கழுகுக் கண் என்று கூறும் வழக்காற்றுச் சொல் இதன் பொருளை அறிய வைக்க உதவும். இதன் பொருள் பெரிய கண்களையுடையவன் என்றுதான் நாம் நினைத்து வருகிறோம். அது சரியன்று. கழுகுக்கு இரண்டு விதமான கண்கள், ஒவ்வொரு கண்ணுக் குள்ளும் உண்டு. ஒன்று வெளியில் அமைந்துள்ள, நம் கண்களுக்குத் தெரிகிறபகுதி. இன்னொன்று உள்ளே நடுவிலே அமைந்திருக்கின்ற பகுதி. வெளிக் கண்ணிலே அணிமைப் பார்வையும், உள் கண்ணிலே சேய்மைப் பார்வையும் உண்டு, இந்தக் கண் அமைப்பு கழுகுக்கு ஆண்டவன் கொடுத்த இயற்கையாகும். இரையைத் தேடிப் பறக்கும்போது வெளிக்கண் அதன் பறக்கும் அண்மைச் சுற்றுப்புறச் சூழலைக் காட்டும். உட்கண் (Telescopic Eyes) என்று இதனை விலங்கியல் சாத்திரம் கூறும். தூரத்தே தெரியும் இரையின்மீது பதிந்து அதனைக் குறி வைத்துச் செல்ல உதவும். ஏனெனில் வெளிக் கண்ணில் இரையைப்பதிய வைத்துக்கொள்ள அதற்கு தூரக் காட்சிப் பார்வையும் கிடையாது. அப்படிப் பதித்தாலும், பறப்பதற்கு இடைஞ்சலாகும்.

உதாரணமாக நாம் நடந்து போகும்போது சாலை முழுமையும் பாராது ஒரு குறிப்பிட்ட விளக்குக்

கம்பத்தையே பார்த்துக்கொண்டு நடப்பதாக வைத்துக் கொள்வோம். இடையே வரும் பொருள் எவையும் நம் பார்வையில் படா. நாமும், விளக்கை அடைய மாட்டோம். இடையிலேயே எதன்மீதாவது முட்டிக் கொள்ளக் கூடும்—ஏனெனில் நம் பார்வை வேறொரு பொருள்மீது பதிந்திருப்பதால்.

ஆகவே ஒரு கண்ணை அதாவது சிறிய உட் கண்ணை—இரையின்மீது பதித்து, பெரிய கண்ணால் அண்மைக் காட்சியைக் கடந்து பறந்து செல்ல உதவவே ஆண்டவன் அப்படிப் படைத்திருக்கிறான். இதனையெல் லாம் அறிந்தவன் கம்பன். அதனால்தான் தூரத்தே வருகின்ற இராம—இலக்குவர்கள்மீது சடாயு சிறு கண்ணால் (Telescopiceyes) பார்வையைப் பதித்து அவர்கள் யார் என்று அறிய முயல்கிறான் என்று கம்பன் அமைக்கிறான், இப்போது கழுகுக் கண் என்ற வழக்கும் பொருந்தும். அதாவது எவ்வளவு தொலைவில் நடந்தாலும் கழுகுப் பார்வை போல அறியமுடிகிறவன் என்ற பொருள் நயம் புலப்படும். கழுகு பார்க்கின்ற போது, அதன் உடற்கூற்று நுண்மையைஎல்லாம் கற்றுத் தெரிந்திருந்த காரணத்தினால்தான், கம்பன் 'சிறு கண்' என்ற பிரயோகம் செய்கிறான்.

*　　　*　　　*

உள்ளதை உள்ளபடிச் சொல்வதினும், உள்ளதை உணர்ந்தபடிச் சொல்லவல்லதே கவிதைக் கலை. அப்படி யானால் கம்பன் இந்த விலங்கியல் சாத்திர அறிவை யெல்லாம் வெறுமனே கற்றவன்; கற்று அறிந்தவன் மட்டு மல்லன்; அவற்றை உணர்ந்து அறிந்தவனும் கூட. இப் போது சொல்லுங்கள். கம்பன் இவையெல்லாம் எப்படி அறிந்தான்? இதற்கு நம்மால் கூறமுடிந்த ஒரே பதில் "கல்வியிற் பெரியன் கம்பன்' என்பதுதான்.

இலங்கை நகரைப்பற்றிச் சொல்ல வந்த கம்பன் பேசுவான். 'இங்கேயுள்ள மாளிகைகள் பொன்னைக் கொண்டு இழைத்தனவா மணி கொண்டு பொதிந் தனவா, மின்னால் செய்யப்பட்டவையா, இல்லை எதைக் கொண்டு இயற்றியது என்று இன்னும் கண்டுபிடிக் காத ஒரு வஸ்துவைக்கொண்டு கட்டியதா?' என்று; அப்படி 'என் கொண்டு இயற்றிய எனத் தெரிகிலாத' என்று அவனைப் போலவே நாமும் அவன் மேதா விலாசத்தைப் பற்றிக் கையை விரிக்கத்தான் வேண்டி யுள்ளது. கவிதைக் கலையிலும், இலக்கியக் கலையிலும் மட்டுமே கம்பன் கற்றுத் துறைபோகியவன் அல்லன். அறிவியற் கலையிலும் நுணுக்கமான அறிவு நிரம்பப் பெற்றவன். இல்லையேல், ஒரு ஆகாயவிமானம் பறக்கும் முன்முதலில் தரையில் ஊர்ந்துபிறகு 'Take off' எடுத்துத் தான் பறக்கும் என்று இராவணன் சீதையைக் கொண் டேகுகிற காலத்தே சொல்ல முடியுமா? அயோமுகியாம் அரக்கியின் கைப்பட்ட இலக்குவனைக் காணாது திகைத்துத் தேடும் இராமன் பாட்டரி விளக்கு போன்ற அமர்ந்து எரியும் விசையுடைய விளக்கோடு தேடியதாகக் கம்பனால் சொல்ல முடியுமா? இராம—இராவணப் போரில் வரும் எண்ணற்ற அஸ்திரங்கள், படைக்கலங்கள் ஏவுகணைகள் இவைகளின் ரூபத்திலே இன்றைய அழிவுக் கருவிகளைப் படம் பிடித்துக் காட்ட முடியுமா? அதனாலேதான் மெய்ஞ் ஞானமும் விஞ்ஞானமும் ஒரு சேர, அறிவும் அநுபவமும் உடையவனான கம்பன் கழுகைப்பற்றிப் பேசும்போது கழுகாகவே நினைவூட்டு வான். அவற்றுக்கு உடல் மட்டும் இன்னும் விலங்கு உலக மூலமே என்று காட்டத் தனக்குத் தெரிந்த விலங் கியல் சாத்திர அறிவை மிகத் தெளிவாகக் காட்டு கிறான் கம்பன். ஆகவேதான் அவை இன்றைக்கும்

பொருந்துகின்றன. பொருள் சிறந்து, காலச் சூழலிலே எதிர் நீச்சல் போட்டு மேலே வந்திருக்கின்றன. இதைத் தான் கம்பரசிகர் திலகமாம் மகராஜன் அவர்கள்—— ஆம், கம்பனை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து மேம்படுத்திய கனம் நீதிபதியவர்கள் தாம்—தமக்கே உரித்தான அழுத்தந் திருத்தமான ஆங்கில நடையில் சொல்லுவார்கள்.

"Kamban can never become out of date, because he speaks to us and to the whole world with the Voice of Tomorrow."

இன்றைய தலைமுறையினராகிய நமக்கு, நேற்றைய தலைமுறையினனான கம்பன், நாளைய தலைமுறை அறிவோடு பேசுவதினாலே அவன் கடந்த காலத்தினன் அல்லன்; காலங்கடந்தவன் ஆவான்.

## உலகெலாம் அடக்குதல்

நாம் வாழும் இந்த உலகப் பொருள்கள் யாவும் காட்டும் கம்பனின் அறிவின் ஆற்றல் கண்டோம். அதையும் விஞ்சி 'ஓவியக் கவிதை'க்குள்ளே உலகங்கள் எல்லாவற்றையுமே எப்படிக் கம்பன் அடக்கிக் காட்டு கிறான்? உலகம் எல்லாம் என்றால் நாம் வாழும் இந்தப் பூஉலகம் மட்டும் அன்று; அகில உலகமுமாகிய இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள எல்லாவற்றின் அநுபவங்களையும் தன் அநுபவங்களாக ஆக்கிக்கொண்டு அவற்றுடன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டுவிட்டால், இது சாத்தியமாகிவிடும். தன் அநுபவங்களாக ஆக்கிக் கொள்ளுதல், ஐக்கியப் படுத்திக்கொள்ளுதல் என்றால் என்ன?

தன் துன்பம் மட்டுமே உணரத் தெரிந்தது விலங்கு நிலை. தன் துன்பமும், பிறர் துன்பமும் உணரத் தெரிவது மனித நிலை. தன் துன்பமே மறந்து பிறர் துன்பம் மட்டுமே உணரத் தெரிவது நிறை நிலை; இதைத்தான் வள்ளுவன் சொல்லுவான்;

"அறிவினால் ஆகுவதுண்டோ, பிறிதின் நோய்
தன்நோய் போல் போற்றாக் கடை?"

பிறர்படும் துன்பத்தைத் தன் துன்பமே போல் கொண்டு துயர்துடைத்தால் அதைவிட உயரிய நிலை கிடையாது. அப்போது 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற நிலை உருவாகும். 'காக்கை குருவி எங்கள் ஜாதி' என்று எல்லோருடனும், எல்லாவற்றுடனும் உறவும், அந்த உறவினால் அவர்கள் மற்றும் அவைகளுடைய இன்ப துன்பங்கள் தம் அநுபவங்களாக ஆகிவிடும். இது தான் கீதாசாரியனால் 'யோகக்ஷேமம் வஹாம் யஹம்' என்றும், தாயுமானவரால் "எல்லாரும் இன்புற்றிருக்க வேண்டும்" என்றும் போற்றிப் பேசப்படும் நிலையாகும். இதைத்தான் கம்பனும் 'தீயோர் இறந்து உகநூறி, தக்கோர் இடர் துடைத்து' என்பதை அவதார நோக்க மாகக் காட்டுவான். கீதாசாரியன் சொல்லும் 'துஷ்ட நிக்ரஹமும், சிஷ்ட பரிபாலனமும்' இவைதாம் ஒரு நாணயத்தின் இருபுறங்கள்போல தீயோரை அழித்த லும், தக்கோரைக் காத்தலும் ஆகும். இதன் அடிப் படையான நோக்கம் பிறர் துயர் துடைத்தல்தான். தக்கோர் படும் துயரம் தீர்க்கவே தீயோரை அழிக் கிறான். துயரம் தீர்த்தாலே, அவர்களைக் காக்க முடியும். இதைத்தான் இறைத் திருக்கோலங்களின் அபயத் திருக்கர, வரதத் திருக்கர முத்திரைகள் புலப் படுத்துகின்றன என்பர். ஆக, பிறர் துயரம் களைதல் என்றாலே பிறரை நேசிக்க வேண்டும்; பிறரை நேசிக்க,

அவரை உறவாகக் கருத வேண்டும்; பிறர்மீது அன்பு செலுத்தினாலே அது சாத்தியமாகும் என்பது பெறப் படுகிறது. அந்த அன்பு என்கிற உள் உறுப்பின் வளர்ந்த நிலையே, பேருருவ நிலையே, விசுவ உள்ள நிலையே, மனிதனின் விசுவரூப நிலை ஆகும்.

இதை இன்னும் கொஞ்சம் தெளிவாக்கிக்கொள்ள இராமலிங்க அடிகள் திருவருட்பா துணை செய்யும். அன்பு செய்யும் அற்புதங்களாகக் காட்டுவார் அவர்:

''அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே!
அன்பெனும் குடில் புகும் அரசே!
அன்பெனும் வலைக்குட்படு பரம்பொருளே!
அன்பெனும் கரத்தமர் அமுதே!
அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே!
அன்பெனும் உயிர் ஒளிர் அறிவே!
அன்பெனும் அணுவுள் அமைந்த பேரொளியே
அன்புருவாம் பரசிவமே.''

மலையே, அன்பு என்ற பிடிக்குள் அடங்கும். அரசனே அன்பு என்ற குடிலுக்குள் வந்துவிடுவான், பரம்பொருளே அன்பு என்ற வலைக்குள் சிக்கிக்கொள்ளும். பேரொளியே அன்பு என்ற அணுவிற்குள் அமைந்துவிடும். அன்பினால் எதையும் சாதிக்க முடியும்; யாரையும் வெல்ல முடியும். இதை அன்பு என்ற அணு சாதித்தாலும், சாதிக்கிற போது அணுவளர்ந்து பேரொளியையே உள்ளடக்கி விடும். அதுதான் மலையையே பிடிக்குள் அடக்கும் அன்பு வித்தை. கடலையே கடத்துள் அடக்கிவிடும் பரிபூர்ண—நிறைந்த அன்பின் நிலை. அப்படித்தான் உலகங்களையே காவியத்திற்குள் அடக்கி, காவிய விசுவரூபம் மட்டுமன்று, தன் உள்ள விசுவத் தன்மையை

யும் கம்பன் காட்டுகிறான். இராமன் என்கிற மனிதன் அப்படி அடக்கி, வாழ்ந்து அநுபவித்துக் காட்டுகிறான் என்பதாலேயே மனிதனின் விசுவரூப நிலையையும் காட்டிவிடுகிறான். அந்த வளர்ந்த, பேருள்ள நிலையை எப்படிமனிதன் ஆய இராமன் அநுபவித்துஅடைந்தான் என்று ஒவ்வொரு நிலையாக, வளர்ச்சியின் ஒவ்வொரு தோற்றமாகப் பார்ப்போமா?

O

# 2. வாலிவதம்

## வாலிவதமும்—இராமனும்

இதோ, கிஷ்கிந்தைக்கு வாருங்கள். அதோ பாருங்கள். வாலி இராம பாணத்தால் வீழ்ந்து கிடக்கிறான். தன் மகன் அங்கதனை இராமனிடம் கையடையாக்கு கிறான். அங்கதன் உடனே இராமனை வணங்கு கின்றான். நன்றாக கவனமாகப் பார்த்துக் கொண்டு வாருங்கள்.

"தன் அடி தாழ்தலோடும், தாமரைத் தடங்கணானும்,
பொன் உடைவாளை நீட்டி," 'நீ இது பொறுத்தி" (4093)

என்று சொன்ன சொற்கள் காதில் விழுந்தனவா? இப்படி இராமன் சொன்னதும், என்ன நடக்கிறது தெரியுமா?

"என்னலும் உலகம் ஏழும் ஏத்தின;" (4093)

வெறும் உடைவாளை ஏந்துவதற்காக மட்டும் அங்க தனிடம் இராமன் கொடுத்திருந்தால் 'உலகம் ஏழும் ஏத்தின' என்கிற கம்பனின் பிரயோகத்திற்கு இட மில்லையே. அப்படியானால்? உலகம் எப்போது ஏத்தும்? அதிலும் இங்கே மனிதோத்தமனான இராமன் எதைச் செய்தான் என்று உலகம் ஏழும் ஏத்தின? அறத்தை நிலைநாட்ட வந்த அண்ணல் வாலிக்குத் தவ றிழைத்து விடுகிறான். தான் செய்த தவற்றை உணர்ந்து அந்தத் தீங்கால் பெரிதும் பாதிப்பிற்கு உள்ளாகி,

தந்தையை இழந்துவிட்ட அங்கதனிடம் தன் செயலுக்கு, தவற்றுக்கு மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறான். அங்கதனிடம் உடைவாளை நீட்டி 'நான் செய்த இச்செயலை நீ பொறுத்துக் கொள்' என்கிறான். அதனால்தான், மனித வடிவிலிருந்தாலும், அறம்தலை நிறுத்த வந்த பரம் பொருள் ஆகையால், அப் பரம்பொருளும் தான் செய்த தீங்கிற்கு வருந்தும் உயர்ந்த பான்மை கண்டே உலகம் ஏழும் ஏத்தின.

**நீ இது பொறுத்தி:**

'பொறுத்தி' என்ற சொல் 'மன்னித்துக் கொள்' என்ற பொருளில் இங்கு கையாளப்பட்டுள்ளது. 'தாங்கிக் கொள்' என்ற பொருளில் அன்று. கம்பன் 'பொறுத்தி' என்ற இந்தச் சொல்லை 'மன்னித்துக் கொள்ளுதல்' என்ற பொருள் படத்தான், காப்பியத்தின் பிற இடங்களிலும் கையாண்டிருக்கிறான்.

வாலியே இராமனை முதலில் பலவாறாகப் பேசிவிடுகிறான். பிறகு இராமன் முழுமுதல் என உணர்ந்ததும், தனது குற்றத்தைப் பொறுத்தருளுமாறு இராமனிடம் வேண்டிக்கொள்ளும்போது 'தீயன பொறுத்தி' என்றுதான் சொல்லுகிறான்.

விராதன் இராமனால் மீட்சி பெற்று மீளும்போது 'உன்னை ஆதனேன் ஒறுத்த தன்மை; ஊழியாய் பொறுத்தி!' என்று சொல்லித்தான் விடைபெறுகிறான்.

கும்பகருணன் இறுதியாகப் போருக்குப் புறப்படும் தறுவாயில் இராவணனிடத்தே

'இற்றைநாள் வரை, முதல், யான் முன் செய்தன
குற்றமும் உள எனின் பொறுத்தி; கொற்றவ!' (7368)

என்று வேண்டித்தான் போகிறான்,

இதெல்லாம் ஏன்? நாம் நடைமுறையில் 'பொறுத்துக் கொள்ளுங்கள்' என்று சொல்வதுகூட இந்தப் பொருளில் தானே!

## இராமனே தவறு உணர்தல்

இராமனே தான் தவறிழைத்ததை மறைமுகமாக இரண்டு இடங்களில் உணர்த்துகிறான். சுக்கிரீவனுக்கு முடிசூட்டியதும், இராமனை, கிட்கிந்தையிலேயே மாரிக் காலத்தில் வசிக்குமாறு சுக்கிரீவன் வேண்டுகிறான். அதற்கு இராமன் மறுத்துரைக்கும் போது,

...போரின்
வில்லறம் துறந்தும் வாழ்வேற்கு, இன்ன மேன்மை
இல்லாச்
சில்லறம்; புரிந்துநின்ற தீமைகள் தீருமாறு
நல்லறம் தொடர்ந்த நோன்பின், நவை அற
நோற்பல் நாளும்.'' (4137)

என்கிறான். தான் வில்லறம் துறந்ததாகப் பகிரங்கமாக இராமனே ஒப்புக்கொள்வதோடு தான் புரிந்த தீமை தீருமாறு நாளும் நோற்கப் போவதாகவும் சொல்லு கிறான்.

அடுத்தாற்போல அனுமனுக்கு மாரிக்காலம் கழிந்து வரும்படி விடையளிக்கும்போது, அனுமன் தான் மட்டும் இராமனுடன் தங்கிப் பணி செய்ய அனுமதி கேட்கிறான். அதனை மறுக்கும்போது இராமன் என்ன காரணம் காட்டுகிறான் தெரியுமா?

'நிரம்பினான் ஒருவன் காத்த நிறைஅரசு இறுதி நின்ற
வரம்பு இலாததனை, மற்றுஓர் தலைமகன் வலிதின்
கொண்டால்,
அரும்புவ நலனும் தீங்கும்; ஆதலின், ஐய!...' (4143)

நீ அங்கேயே சுக்கிரீவனுடன் இருந்து காப்பாற்றுவாயாக என்கிறான்.

வாலியை இராமன் 'நிரம்பினான் ஒருவன்' என்று பாராட்டவே செய்கிறான். நற்குணங்கள் நிரம்பியவன் என்றுதானே பொருள் இதற்கு? அதுமட்டுமா, அடுத்துப் பாருங்கள். 'நிறையரசு' என்று குறிப்பிடுகிறான். இது வாலி ஆட்சியிலே குறையே இல்லை, நிறையே இருந்தது என்பதைச் சுட்டுகிறது. அந்த அரசை சுக்கிரீவன் மேற்கொண்டது 'வலிதின் கொண்டது' என்றும், இராமன் குறிப்பிடுகிறான். ஆட்சியை நியாயமாகவோ, முறைப்படியோ சுக்கிரீவன் பெறவில்லை. வன்முறையாலேயே பெற்றான் என்றும் சொல்லாமல் சொல்லிவிடுகிறான். ஆக,இங்கும் இராமன் குற்றமற்ற வாலியைத்தான் முறையற்ற வழியில் கொன்றதாகவே ஒப்புக்கொள்ளுகிறான்.

## இராமன் தவறு எது?

நம்முடைய பிரச்சினை வாலி வதம் சரியா, தவறா என்று பார்ப்பதன்று; வாலியை வதைத்த விதம் சரியா, தவறா என்பதுதான். முன்சொன்ன பிரச்சினை பெரியது, அதன் அடிப்படையே வேறு. மறைந்து நின்று அம்பு எய்தது தவறு என்று இராமன் ஒப்புக்கொண்டு மன்னிப்புக் கேட்கிறான் என்பதே நமக்கு இங்கே வேண்டுவதாகும்.

இராமனுடைய புகழுக்கு வாலிவதை என்ற செயல் மாசாகவே அமைகிறது; தன் துணைவியையே அபகரித்த இராவணன் முதல் நாள் போரில் நிராயுதபாணியாக நிற்கும் போதும், ஒரு சந்தர்ப்பம் தந்து, 'இன்று போய் போர்க்கு நாளை வா' என்று கூறுமளவுக்கு போர் அறம் காத்தவன், இப்படி வாலி வதையில் மட்டும் நடந்து

கொள்வானா, என்ன? சந்தர்ப்பச் சூழ்நிலை காரணமாக இராமனுக்கு வேறுவழி இருக்கவில்லை. இராவணன் செய்த அதே பிழையை வாலியும் செய்துள்ளான் என்று கேள்விப்பட்டதுமே வாலியைக் கொல்வது என்று முடிவு செய்ததும் சந்தர்ப்பவசமே. இதற்கு விடை காண்பது நம் பிரச்சினை அன்று. வாலியின் வரபலம் காரணமாக மறைய நின்று அம்பு எய்ய வேண்டிவந்தது சந்தர்ப்பமே. இராமன் மன்னிப்பு கேட்கிறானே இதற்காக, அதுதான் நம் விஷயம் இப்போது.

**தான் உணர்ந்த தவற்றுக்கு வருந்துவது :**

இதை எல்லாம் அங்கதன் மனத்தில் கொள்ளக் கூடாது என்பதற்காகவே, 'பொறுத்தி' என்று மன்னிப்பு கேட்கும் முகமாக இராமன் சொல்கிறான். இதைத்தான் கம்பனும் அவனுக்கே கை வந்த கலையாம் குறிப் பாலுணர்த்தும் பாங்காக - Suggestive ஆக - உடைவாளை நீட்டி 'இது பொறுத்தி' என இராமன் சொல்வதாகக் காட்டுகிறான். மறுபடியும் இப்போது மனக்கண்ணில் கொண்டு வாருங்கள். இதோ வாலி கீழே வீழ்ந்து கிடக்கிறான். எதிரே இராமன் நிற்கிறான். அவன் எதிரே அங்கதன் நிற்கிறான். இராமன் தன் உடைவாளை எடுத்து நீட்டி 'நீ இது பொறுத்தி' என்று கம்பன் சொல்லவைக்கும் பொருள் இப்போது புரிகிறதா? நீட்டி என்றால் சுட்டிக்காட்டி. இது என்றால் வாலி கீழே வீழ்ந்து கிடக்கும் செயலை.

**மகாத்மாவாக முதல்நிலை - உணர்தலும் வருந்தலும்:**

அவதாரமானாலும் இராமன் இங்கே இப்போது மனிதன்தான். மனிதன் மகாத்மா ஆவதற்கு முதல் நிலை தன் தவறு உணர்தல்தான். அதையே இராமனும்

மானுட வேஷம் போட்டுக்கொண்டதால் செய்கிறான். யானைக்கும் அடி சறுக்கும், என்பது போல், இராமனுக்கும் அடி சறுக்கிவிடுகிறது. அதுவே தான் அவனைப் பரம்பொருளிலிருந்து மனிதனாக இனம் பிரித்துக் காட்டுகிறது. நாம் உண்மையிலேயே தெரிந்தோ, தெரியாமலோ ஏதாவது தவறு செய்திருந்தால், அதை உலகு அறிய துணிந்து ஒப்புக்கொண்டு விட்டால், பிறர் குற்றச்சாட்டுக்கள் தாமே அடங்கிப் போய்விடும். தன் தவற்றை உணர்வது, உணர்ந்து வருந்துவது—இந்த இரண்டும் தாம் மனித நிலையிலிருந்து மகாத்மா ஆக அடிகோலுகிறது. இதைத்தான் இராமனும் செய்கிறான்.

## வருந்தியதை உலகறியச் செய்யாமை ஏன்?

தான் செய்தது தவறு என்று இராமன் உணர்ந்து விடுகிறான்; உணர்வதோடு வருந்தவும் செய்கிறான்; மன்னிப்புக் கேட்கவும் செய்கிறான்—ஆனால் இரண்டையும் மறைமுகமாகவே கம்பன் காட்டுகிறான். ஏன்?

இராமனைப் பொறுத்தவரை ஒரு பெரிய தரும சங்கடம் இங்கே. ஏன் என்கிறீர்களா? இராமன் தன்னை என்னதான் அவதார புருஷன் என்று இனங்காட்டிக் கொள்ளவில்லை என்றாலும், மனிதன் என்ற முறையிலுமே உயர்ந்த புருஷன்; உத்தமன்; தண்டகவனத்து முனிவர்கள், அகத்தியர், ஆசி பெற்றவன்; விராதன், கவந்தன், அகலிகை ஆகியோர்க்கு சாப விமோசனம் நல்கிய புனிதன்; சடாயு, சபரி குகன், அனுமன், போன்றோரின் அன்பு நிறையப் பெற்றவன். ஆகவே தான் தவறிழைத்ததாக நேரிடையாக, உலகறியவோ அறிவித்து விட முடியாது, 'பரதன் முன்தோன்றி

னாயே' என்று வாலியே முதலில் இதைத்தான் காரணங் கூறி ஏசுவான். நேரிடையாக ஒப்புக்கொள்வது இழுக்கு என்றோ தனக்கு அவமானம் என்றோ கருதவில்லை. நிலை வித்தியாசம் பார்க்கவும் இல்லை.

இராமன் பின்பற்றிய வழி—நெறி—மிகவும் அவசர காலத்தில் நெருக்கடி நேரத்தில் மட்டுமே பின்பற்ற வேண்டியது; அந்த வழி தவறு என்றும், குறிக்கப்பட்ட அந்த ஒருவனைத் தவிர வேறு யாருக்கும் தீங்கிழைத் திடாத அறிவுடனும் பின்பற்ற வேண்டிய ஒன்று. அதை எல்லாரும் எல்லாக்காலத்தும் சாதாரணமாக உபயோகிக்க இடம் கொடுத்து விடக்கூடாது.

இராமன் ஒப்புக்கொண்டு நியாயப்படுத்தி விட்டால் அதுவே சட்டமாகிவிடும்; பிறரும் அதே தவற்றைச் செய்துவிட்டு அதே சமாதானம் கூறி எளிதில் தீமை புரியத் தொடங்க வழிவகுத்ததாகி விடும். அதுமட்டு மல்ல, அறத்தை நிலை நிறுத்துவதாகவும், அரக்கர்களை அழிப்பதாகவும் வாக்குத்தந்துள்ள இராமன் வாலியைத் தண்டித்த முறை தவறுதான் என்று தன் வாயால் நேரிடையாகவே கூறிவிட்டால், அறத்தை நிலை நிறுத்தல் என்ற உயர்ந்த நோக்கத்திற்காக எத்தகைய நெறி பிறழ்ந்த செய்கையையும் யாரும் செய்யலாம் என்று உரிமை வழங்கிவிட்டதாகி விடாதா?

ஆகவேதான் இராமன் நெறி மீறிய பழியைத் தன் மீது ஏற்றுக்கொண்டாலும் பரவாயில்லை. இதற்கு அங்கீகாரம் வழங்குகிறாற்போல் உலகறிய மன்னிப்புக் கேட்டு விடக்கூடாது என்று கம்பன் மிக நுட்பமாய் இராமன் உடைவாளை நீட்டுகிறாற்போல் கீழே வீழ்ந்து கிடக்கும் வாலியைச் சுட்டி 'நீ இது பொறுத்தி' என்று

சொல்ல வைக்கிறான். கம்பன் தன்னுடைய மேதா விலாசத்தால் சாதிக்கிற அற்புதம் இது.

## இராமன் நெறி தவறினானா?

இராமன் இந்த வழியைப் பின்பற்றியதற்கு வேறு ஒரு காரணம் உள்ளது. உதாரணமாகக் கொள்ளையடித்துச் செல்பவனோ, கடத்தல்காரன் ஒருவனோ விதி முறைகளை மீறி ஓடுகிறான், என்றால் அவனைப் பிடிக்கப் போகும் காவல் துறையினரும் அதே மாதிரி விதி முறையை மீறி அவனைவிடவேகமாகப் போனால்தான் அவனைப் பிடிக்க முடியும். அப்படித்தான் வாலியை வதைத்த விதமும். எதிரில் யார் நின்று போரிட்டாலும் பாதிபலம் தனக்கு வர வேண்டும் என்று பெற்ற அந்த வரத்தைத் தீய வழிக்குப் பயன்படுத்தியதாலேயே, வர துஷ்பிரயோகம் செய்தவனைத் தண்டிக்க நெறி துஷ்பிர யோகம் செய்யவேண்டி நேரிட்டுவிட்டது இராமனுக்கு.

அப்படியானால் நெறி பிறழ்ந்து தண்டித்ததை நியாயப்படுத்திக் கொண்டுவிட்டால் பின்பு ஏன் மறை முகமாகவேனும் இராமன் மன்னிப்புக் கோரினான்? முரணாக இருக்கிறதே என்று தோன்றுகிறதல்லவா?

## தவறவில்லையானால் வருந்தியது ஏன்?

வள்ளுவன் என்ன சொல்கிறான் தெரியுமா?

''நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம்;
நோய் செய்யார்
நோய் இன்மை வேண்டுபவர்''.

மற்ற உயிர்க்குத் துன்பம் செய்யும்போது அந்த உயிர் துன்பப்படலாம். துன்பம் அந்த உயிரின் உடலில் சிறிது பொழுது தாக்கி பிறகு நீங்கிவிடும். ஆனால்

துன்பம் இழைத்தவர்களின் உடலிலே துன்பம் தாக்கா விட்டாலும் மனத்தைத் துன்பம் தாக்கிவிடும். அவர்கள் மனச்சாட்சி இடித்துக் காட்டித் துன்பப்படுத்தும்.

'துன்பமெல்லாம் துன்பப்பட்டவர்க்கு அல்ல;
செய்தவரையே அடையும்'

என்பதே வள்ளுவம்.

'பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்'

என்பது அறியாதவனா இராமன்?

'எனைத் தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணா செய்யாமை தலை'

என்று நடந்து காட்டியவனில்லையா இராமன்?

'தன் நெஞ்சு அறிவது பொய்யற்க; பொய்த்தபின்
தன் நெஞ்சே தன்னைச் சுடும்;

என்ற நீதி தெரியாதவனா இராமன்? ஆகவே தன் மனச்சாட்சி தன்னை உறுத்தாமலிருக்க, தன் செய்கை யின் விளைவு தன்னைப் பாதிப்பதிலிருந்து நீக்கிக் கொள்ள மனந்திறந்து, நிலை மறந்து புருஷோத் தமனான இராமன்,—தன்னைவிட எல்லாவிதத்திலும் சிறுவனான—அங்கதனிடத்தும் மன்னிப்புக் கேட் கிறானே, அந்தச் செய்கைதான் மிக மிக முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியது. 'உலகம் ஏழும் ஏத்தின' என்று கம்பன் சொல்வதின் பொருள் இப்போது புலப்படு கிறதா?

### மனத் தூய்மை பெருகவே :

வாழ்க்கையின் ஏதாவது கட்டத்தில் நாம் ஒவ்வொரு வருமே இந்த மாதிரி ஒரு தவறு செய்ய நேரிடும். நாம் செய்தது தவறுதான் என்று நமக்குத் திட்டவட்டமாக

அல்ல, சிறிதளவேனும் தெரிந்தாலும் அதை நாணயமாக நாம் ஒப்புக்கொண்டு, உரியவரிடம், தவறிழைக்கப்பட்ட வரிடம், மன்னிப்பு கேட்பதே மிக உயர்ந்த பண்பாகும். அப்படி ஒப்புக்கொண்டு விட்டால், ஒப்புக்கொண்ட பிறகு நம்மால் தவற்றுக்கு ஆளானவர்களோ, அடுத் தவர்களோ யாரும் நம்மைக் குறை கூற முடியாது. அதைவிட முக்கியமானது நம்முடைய மனமும் நிச்சயம் குற்ற உணர்ச்சியிலிருந்து விடுபட்டுவிடும். ஏனெனில் அந்த மனபாரம் அப்போதே தீர்ந்து விடும். இல்லையா?

மனம் ஒரு கண்ணாடியைப் போல; மாசு படியப் படிய தானும் விளங்குவதில்லை: அடுத்த பொருளையும் விளக்குவதில்லை. மனம் தூய்மை குறையக் குறையத் தானும் பண்படுவதில்லை; பிறர்க்கும் பயன்படுவதில்லை. தூய்மை மெருகு ஏற ஏறத்தான் மனம் பிரகாசிக்கும். பிரகாசமடைந்தால்தான், தானும் விளங்குவதோடு, பிறர்க்கும் பயனாகும் விளக்காகும். அதுதானே வள்ளுவன் சொல்லும் அறம்?

'மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்தறன்;

இன்னொன்றையும் இது நமக்கு உணர்த்துகிறது. மான் பசு போன்ற விலங்குகள் ஓர் உயிர்க்கும் தீமை செய்யாத விலங்குகள். அவை வெட்டவெளியில் திரிந்து மேய்ந்து வாழும் வாழ்வுடையன. பகல் முழுவதும் வெளிவராமல், குகை புதர் போன்ற மறைவிடங்களில் வாழும் துர்ப் பாக்கியமான நிலை புலி, சிறுத்தை போன்ற கொடிய விலங்குகளுக்கு. ஏன் அப்படி? புலி எந்நேரமும் அஞ்சி தற்காப்புக்காக அப்படி வாழ நேரிடுகிறது. பிற விலங்கு களுக்கோ, உயிர்களுக்கோ தீங்கு இழைத்து, கொன்று தின்று வாழும் விலங்குகளின் வாழ்க்கையைப் போன்றது தான், பிறர்க்கு இன்னா செய்பவர்கள், தீங்கிழைப்பவர்

கள் வாழ்க்கையும். அவர்களும் தற்காப்பை மறந்து கவலையில்லாமல் இன்பமாக வாழும் நிலை அற்றவர் கள்.

ஆகவே பிறர்க்குத் தீமை செய்யக்கூடாது; செய் தால் மனத்தில் மாசு படியும். மாசு படிந்தால் அறத் தோடும் பொருந்தி வாழ முடியாது. தவறித் தீமை புரிந்து விட்டால், இராமனைப் போல உடனே மன்னிப்புக் கேட்டு, அதை ஏற்றுக் கொண்டு, மனச் சாட்சியின் தாக்குதலிலிருந்து விடுதலை பெற்று மனம் மாசுபடியாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். மனத்தில் மாசு படிந்தால் உடனே துடைப்பது போன்றதே இராமன் செய்த தன் தவறுணர்ந்து வருந்தி மன்னிப்பு வேண்டிய செய்கை. அப்போதுதான் மனிதன் மன மாசு அற்றவனாகி தூய்மையின் முதல் நிலையைக் கடந்து, மகாத்மாவாகிற இரண்டாவது நிலையை அடைய முடியும் மேலும் வளர்வதற்கு.



# 3. இராவண வதம்

## 'வழி அலா வழி'

இராமாவதார நோக்கமே இராவண வதம். இராவணனுடன் போர்புரிய வேண்டி இராமனும் இலக்குவனும், சுக்கிரீவன், அனுமன் மற்றும் குரங்குப் படைகளுடன் கடல்மீது பாலம் அமைத்து வந்து இலங்கையை முற்றுகையிடுகின்றனர். போர் துவங்குமுன் தூதுவன் ஒருவனை இராவணனிடம் அனுப்பிச் சீதையை விடுவதுண்டா? இல்லை போர் புரியத் தயாரா? என்று கேட்டு வரவேண்டுமென்கிறான், இராமன். வீடணனும், சுக்கிரீவனும் சரி என்றாலும் இலக்குவன் மட்டும் கூடாது என்கிறான். 'இரக்கமது இழுக்கம்' என்று சொல்லி இலக்குவன் உடனேபோரைத் துவக்க வேண்டுகின்றான். இராவணன் இழைத்த அநீதிகளை அடுக்கிக் காட்டுகிறான்.

சீதையைச் சிறைப் பிடித்தான். தேவர்களுக்குத் துன்பம் விளைவித்தான். அந்தணர்க்கும் தீங்கு புரிந்தான். எல்லா உலகங்களையும் ஏக சக்கராதிபதியாய் ஆண்டுவந்தான். இந்திரனுடைய செல்வத்தையும் அபகரித்துக் கொண்டான். சடாயுவைக் கொன்றான். இலக்குவன் அடுக்கிக் காட்டுகிற காரணங்கள் எல்லாம் இராவணன் செல்லும் வழியின் பயங்கரத்தைக் குறிக்கின்றன. போகக்கூடாத வழியில் போய்க்கொண்டு இருப்பவனிடம் போய், போர் செய்வதைத் தவிர, தூது

விடுத்து. சமாதானம் பேசுவதால் என்ன விளைந்திடப் போகிறது என்பது இலக்குவன் வாதம்.

'பொறை செயத்துறை'

இதையெல்லாம் கேட்ட இராமன் என்ன செய்கிறான் தெரியுமா? கம்பன் சொல்கிறான்: "சேவகன் முறுவல் செய்தான்". அந்த முறுவலிலேயே பதில் முழுவதும் அடங்கிவிடுகிறது. 'இலக்குவா'! என் முடிவும் போர் துவங்குவதுதான். என்றாலும் ஆன்றோர்கள் ஆய்ந்து, முடிவு செய்துள்ள நீதிமுறையிலிருந்து நாம் வழுவலாமா? என்று ஒரு கேள்வியைப் போட்டு, இதோ இராமன் என்ன அற்புதமாகப் பதில் சொல்கிறான்.

"புயத்துறை வலியரேனும், பொறையொடும் பொருந்தி வாழ்தல்
சயத்துறை: அறனும் அஃதே" (6981)

எவ்வளவுதான் படைபல பராக்கிரமம் இருந்தாலும் பொறையுடைமை, சமாதானம், அமைதி இவற்றுடன் இருந்தால்தான் ஜெயமடைய முடியும். 'பொறை' என்ற சொல் எவ்வளவு பொருத்தமாக இங்கு வந்து விழுகிறது, பாருங்கள்: 'ஒருவர் பொறை இருவர் நட்பு' என்பது தானே சட்டம்? வெறும் புஜபல பராக்கிரமம், போர் வீரம் மட்டும் ஜெயமாகாது: வீரத்தோடு விவேகமும் வேண்டும். போராண்மையோடு பொறுமையும் வேண்டும். பொறுமை என்பது உள்ளத்தின் ஒரு மாபெரும் சக்தி. ஒருவனது வலிமையை அவனது பொறுமையைக் கொண்டுதான் அளந்தறிய முடிகிறது. ஆக, பொறுமையை வளர்த்துக்கொண்டால், அதுவே வலிமையை, சக்தியை வளர்த்துக் கொள்வதாகும். வலிமையும் சக்தியும் கூடினால் வெற்றி தானே கிட்டாதா? பொறையுடன் வாழ்ந்தால் அதுவே

வெற்றிக்கு வழி. அந்த நிதானம் இன்றி வாழ்ந்தால் அதுவே தோல்விக்கு வழி.

இராவணன் செய்துள்ள அக்கிரமங்களுக்குப் போர் புரியத்தான் வேண்டும் என்றாலும், அதையும் நீதி தவறாது செய்ய வேண்டும். அவன் நீதி தவறித் தீங்கிழைத்தான் என்பதற்காக நாமும் நீதி முறை வழுவி, போர் நியாயம் தவறி தூது விடுக்காது உடனே போர் செய்யக்கூடாது என்று அஹிம்சைத் தன்மையை எவ்வளவு நாசூக்காக, 'சத்தியமேவ ஜெயதே' என்பது போல் 'பொறை செயத்துறை' என்று இராமன் அறிவிக்கிறான்; அறிவித்ததோடு அல்லாமல் தானும் அதைக் கடைசிவரை கடைப்பிடித்து ஒழுகுகிறான், அதுதான் இராமனின் தனிப் பெருஞ்சிறப்பு. தன்னால் செய்ய முடியாததைச் சொல்லுவதில்லை; சொல்லுவதைச் செய்யாமல் விடுவதில்லை. இராமனைப் பொறுத்தவரை இதுவே அவன் கொள்கையாக ஆகிவிடுகிறது. எப்படி அவன் கொண்ட கொள்கையில் பிடிப்புடன் செயல் பட்டான் என்று பார்க்கலாமா?

**அறம் கடந்த நிலைமை**

முதல் நாள் போரிலே இராம—இராவண யுத்த முடிவிலே, இராவணன் மகுடம் இழந்து நிராயுதபாணியாய் நிற்கிறான். நிற்கிறவன் யார் தெரியுமா என்று அந்த நேரம் பார்த்துச் சொல்லுவான் கம்பன்:

"...அமர் பொருமேல்,
வெல்லும் அத்தனை அல்லது, தோற்றிலா விறலோன்"
(7263)

இதுதான் அங்கதம். வெற்றியைத் தவிர வேறொன்றும் அறியாதவன் என்று இராவணன் நிலை இரக்கத்தை என்ன லாகவமாய்க் குத்திக்காட்டுகிறான்.

"அறம் கடந்தவர் செயல் இது' என்று உலகு எலாம்
ஆர்ப்ப,
நிறம் கரிந்திட, நிலம் விரல் கிளைத்திட, நின்றான்—
இறங்கு கண்ணினன் எல் அழி முகத்தினன், தலையன்,
வெறுங் கை நாற்றினன், விழுதுடை ஆல் அன்ன
மெய்யன்." (7264)

தோல்வியே கண்டிராத வீரன் அல்லவா இராவணன்? அதனால் இப்போது தோல்வியைச் சந்திக்க நேர்ந்ததும் அவன் நாணிவிடுகிறான். அதனால் கால் விரல்கள் நிலத்தைக் கிளறுகின்றன. ஏதோ இளம் பெண் ஒருத்தி எதிரே மணவாளன் நிற்பதைக் கண்டதைப்போல் கட்டை விரலால் கோலம் போடுகிறான் பெருவீரனான இராவணன். இதுவரை அவன் இந்த மாதிரியான ஒரு உணர்ச்சிக்கு ஆளானதே இல்லையாகையால், நிறம் கறுத்து, ஒளி இழந்து களை இழந்து ஆல மரம் ஒன்று நிற்கின்றாற்போல் பத்துத் தலைகளும், இருபது கைகளும் தொங்கிக் கிடக்க நிற்கிறான். எவ்வளவு சோகமயமான காட்சி! இந்த இடத்தில் தன் கை வரிசையைக் காட்கிறான் கம்பன் ஒரு சொற்றொடர் மூலம். 'அறம் கடந்தவர் செயல் இது' என்பதே அந்த கம்பன் கைவண்ணம்.

இது ஏதோ இராவணனுக்கு மட்டும் நேர்ந்த நிலைமை என்று எண்ணிவிடாதீர்கள். இன்றுமட்டுமல்ல, என்றும் அறத்தைக் கைவிட்டு அக்கிரமம் புரியும் அத்தனை பேரும் என்றேனும் ஒருநாள் முடிவில் அடையும் கதி இதுதான் என்று நறுக்கென்று ஒரு ஊசியால் குத்துகிறான் கம்பன். நமக்கு உணர்வு உறைக்க எப்படிப்பட்ட இடத்தில் எதை வலியுறுத்துகிறான்? சொல்ல வேண்டியதைச் சொல்ல வேண்டிய நேரத்தில், சொல்ல வேண்டிய இடத்தில், பசுமரத்தில் ஆணி

அறைந்தாற்போல் பிடித்துக் கொள்ளுமாறு சொல்லிக் காட்டுவதில் கம்பனுக்கு நிகர் கம்பனே.

ஊர்வசி உடைவாள் ஏந்த, மேனகை வெற்றிலை உதவ திலோத்தமை செருப்பினைத் தாங்கிவர, அரம்பையர் குழாமே புடைசூழ, "கருப்புரச் சாந்தும், கலவையும், மலரும் கலந்து உமிழ் பரிமளகந்தம் வீச" இருந்த இராணன் எங்கே?

நிறம் கரிந்திட, கால்விரல் நிலம் கிளறிட, தொங்கிய கைகளுடனும், ஒளி இழந்த முகத்துடனும் விழுதுகள் தொங்கும் ஆலமரம் போல் நிற்கும்—கூசிக் குறுகி, நாணி நிலம் நோக்கி நிற்கும்—இராவணன் எங்கே?

நம்மால் நினைத்துப் பார்க்கவே முடிமவில்லை. பார்த்தீர்களா? இந்த இடத்தில் கம்பன் நமக்குப் பிரசன்னமாகி, 'அடேய்! மூட மனிதர்களே! இது இராவணன் அடைந்த நிலை என்று எண்ணி விடாதீர்கள். இராவணனுக்கே இது கதி என்றால் சாமான்யரான உங்களுக்கு? ஒன்றை நன்றாக மனத்தில் இருத்திக் கொள்ளுங்கள். அறம் கடந்த யாருக்கும் (விதிவிலக்கே இல்லை) இதுதான் நிலை' என்று எச்சரிக்கை செய்கிறாற்போல் இல்லை? அதனால்தான் உலகம் ஆர்த்தது என்று ஒரு சொல்லைப் பிரயோகிக்கிறான். அறமற்ற ஒரு செயலைச் செய்யப் புகுமுன், மிகவும் பலவீனமான எண்ணம் படைத்த யாரும், இந்த 'விழுதுடை ஆல் அன்ன மெய்ய'னாய் நிற்கும் இராவணனை மனக்கண் முன் ஒரே ஒரு தரம் நிறுத்திப் பார்த்தால், சத்தியமாய் அப்புறம் அந்த நினைவே வராது.

**'இன்று போய், போர்க்கு நாளை வா'**

இப்படி நிற்கிற இராவணனை நோக்கி இராமனை விட்டுக் கம்பன் என்ன சொல்ல வைக்கிறான், தெரியுமா?

'அறத்தினால் அன்றி, அமரர்க்கும் அருஞ்சமம் கடத்தல்
மறத்தினால் அரிது என்பது மனத்திடை வலித்தி!'
(7267)

இராவணனைப் பொறுத்தவரை அவன் வெறும் வீரத்தையே, தன் பராக்கிரமத்தையே நம்பியிருந்தான்; அறத்தை நம்பி இருக்கவில்லை. அதனால்தான் இராமன் சொல்கிறான், 'மிக உயரிய பிறவியாகிய தேவர்களே ஆனாலும் அவர்களும் அறத்தின் துணையின்றி வெல்ல முடியாது' அறம் என்பது அழியாப் பொருள். அதன் சத்திய நித்தியத் தன்மை ஒன்றே வெற்றிக்கு வழிவகுக்கும். அறவழி அல்லாத வழியில் சென்ற இராவணனுக்குத் தோல்வி ஏன் ஏற்பட்டது என்று இராமன் இங்கே இராவணனுக்கு உறைக்கப் பண்ணுகிறான். இன்னொரு காரியத்தின் மூலமும்—ஆம். இராவணனை எதுவும் செய்யாது விடுகிறான். அதுவும் எப்படி? அவன் வெட்கப்படும்படியான, நெஞ்சில் அடித்தாற் போன்ற ஒன்றைச் சொல்லி:

'இன்று போய், போர்க்கு நாளை வா'

நிராயுதபாணியாய் நிற்கும் இராவணனை இராமன் நினைத்திருந்தால் அப்போதே சிறைப்பிடித்திருக்கவோ, கொன்றிருக்கவோ முடியும். ஆனால் அதைச் செய்தானல்லன். அயர்ந்து, தளர்ந்து, நாணி நிற்கிற அவனை அன்று போய் விட்டு, மறுநாள் போருக்கு வரும்படியாகச் சொல்கிறான். சத்தியமாய்ச் சொல்லுகள்; நம்மிடம் இப்படி நம் எதிரி ஒருவன் வந்து மாட்டிக் கொண்டால் நாம் இப்படி அனுப்புவோமா? மாட்டோம். ஆனால் இங்கே சொல்வது இராமன்என்ற மனிதன் தான்; நம்மைப் போன்ற ஒரு மனிதன்தான். அவனால் மட்டும் எப்படி முடிந்தது? அதுதான் அவன் கொண்ட

கொள்கையில் அவனுக்கிருந்த பிடிப்பு. நிராயுத பாணியைக் கொல்வது அறத்திற்கு முரண்.

இந்த இடத்தில் மட்டுமன்று; கடைசியில் இந்திர சித்தன், கும்பகருணன், மூலபலம் எல்லோரும் அழிந்து பட்ட பின்பும் இராவணன் போர்புரிகிறானே, அப் போதும் இராமன் இதைத்தான் பின்பற்றுகிறான். இராவணன் மேனியை இராமன் அம்பு மழையால், மூட இராவணன் உணர்வு இழந்து தேரில் கிடக்கின்றான். உடனே இராவணன் தேரின் சாரதி தேரை விலக்கி நிறுத்தி விடுகிறான். அப்போது இராமனின் சாரதி மாதலி சொல்லுவான்: 'உணர்வு பெற்றால் இவனைக் கொல்வது அரிது; இப்போதே கொன்றிடுக' என்று. ஆனால் இராமன் பளீரென்று தயக்கம் ஏதுமின்றி, யுத்த களத்தில் அந்த நேரத்திலும் தெளிவாய்ச் சொல் கிறான்,

..................'இகல் நீதியின்
நடைதுறந்து, உயிர் கோடலும் நன்மையோ?
கடைதுறந்தது போர், என் கருத்து' (9876)

இது என.

படைதுறந்து மயங்கிக் கிடக்கிறவன் மேல் ஆயுதம் பிரயோகித்துக் கொல்வது நீதி துறந்த செயல். அதைச் செய்யமாட்டேன் என்று அந்த இடத்திலும், அந்தக் கடைசி நேரத்திலும் இராமன் உறுதியாய் நிற்கிறான்.

'இன்று போய், போர்க்கு நாளை வா'

இராமன் என்ன சொல்கிறான் என்று கவனித்தீர் களா? 'இன்று போய் வா' என்ற முதற் பகுதி சரியே. 'நாளை வா' என்ற பிற்பகுதியும் சரியே. அதென்ன நடுவில் 'போர்க்கு நாளை வா' என்று? 'போர்க்கு' என்ற

சொற் பிரயோகம் ஏன்? கம்பன் ஒரு கவிச்சக்கரவர்த்தி; அவனிடத்தில் எந்த ஒரு சொல்லும் அதிகமாகவோ, குறைவாகவோ பிறக்காது. 'இன்று போய் நாளை வா என்ற சொல்லாட்சியில் இராமனின் குண விசேஷம் நமக்குப் புலப்படுகிறது. நிராயுதபாணியைக் கொல்வது நீதியன்று என்பதால் அன்று போய், மறுநாள் வரச் சொல்லி அனுப்புகிறான். 'நாளைக்கு வா' என்றாலே போர்க்கு என்று தானே பொருள்படும். போர்க்களத்தி லிருந்து 'இன்று' போகச் சொல்லுகிறவன் 'நாளை' வரச் சொன்னால் அதுவும் போர்க்களத்திற்குத்தானே. பின் ஏன் இராமன் 'போர்க்கு நாளை வா' என்று சொல்ல வருகின்றான்?

'நாளை வா'

இதற்கான விடையை இரண்டு பகுதியாய்ப் பிரித்துப் பார்ப்போம். 'நாளை வா' என்றது ஏன் என்பதை முதலில் பார்க்கலாம்.

தவறு செய்பவர்களின் சந்தர்ப்பச் சூழ்நிலைகளை எப்போதும் புரிந்து கொண்டால்தான், அவர்களை நாம் புரிந்து கொள்ள முடியும். அதாவது எந்தமாதிரியான சந்தர்ப்பத்தில், எந்தச் சூழ்நிலையில் ஒருவன் தவறு செய்தான் என்பதைத் தெரிந்து கொண்டால், அவனை யும் நாம் புரிந்து கொள்ளமுடியும்; முடிந்தால் திருந்தச் செய்யலாம்; திருந்த உதவலாம்.

இராவணன் எந்தச் சந்தர்ப்பத்தில் அல்லது சூழ்நிலையில் தவறு இழைத்தான்?

இராவணன் முயன்றுடைய பெருந்தவத்தால் முக்கோடி வாழ்நாள் பெற்றவன். முதல்வனாம் பிரமன் 'எக்கோடி யாராலும் வெலப்படாய்' எனக் கொடுத்த

வரமும் பெற்றவன். தவபலமும், வரபலமும் இதைவிட யாருக்கு அதிகமாகிவிட முடியும்? அட்டதிக்கொடும் உலகம் அனைத்தையும் பொருது வென்ற புயவலிமை உடையவன். கயிலை மலையையே அசைத்த சிறந்த சிவபக்தன்.

இவ்வளவும் பெற்ற ஒருவன் எப்படி இருந்திருக்க முடியும்? ஆணவத்தின் உச்சாணியில்; அகந்தையின் மகுடத்தில்; அவன் விளைவு என்னாகும்? தன்னை விஞ்சுவார் உலகங்களில் யாரும் இல்லை என்ற உணர்வு ஏற்பட்டதுமே எதற்கும் யாரையும் லட்சியம் செய்யாத மனநிலை வந்துவிடும், ஆணவத்தின் பிடியில் சிக்கி அவன் நல்லோர்களைத் துன்புறுத்த ஆரம்பித்தான். அதாவது துன்புறுத்தினால்கூடத் தவறில்லை என்றே நினைக்கவும் ஆரம்பித்தான். உலகோரால் வெறுக்கப் படும் அளவுக்கு அந்த வரமும், தவமும் கேடு விளைத் தன. இராவணன் மட்டுமா, என்ன? நமக்குத் தெரிந்த இதிகாசங்களில் வரும் இத்தகைய அளவற்ற பேராற்றல் பெற்ற எவருமே இதே நிலையர்தாம். கடவுளிடம் வரங் கேட்டுப் பெற்ற இரணியன், சூரபத்மன், பஸ்மாசுரன், மகிடாசுரன், எல்லோருமே கடவுளாலேயே அழிந்தனர் தம் செருக்குக்காரணமாய்.

இராவணன் அகந்தையைக் கிளறிவிட்டாள் சூர்ப் பணகை. அறந்தவறியதில் எல்லாம் தலையாயதாய பிறன் மனை நயக்கும் பெரும் பிழையை இராவணன் இழைக்க சூர்ப்பணகை காரணமாகி நின்றாள்.

இந்தச் சூழ்நிலை முழுதும் அறிந்தவன் இராமன். எப்படித் தவறான உணவு உண்பவன் நோய்வாய்ப் படுவானோ, அப்படியே தவறான வழியில் சென்ற இராவணன் துன்பம் உறுவான் என்பதையும் இராமன் அறிவான்.

அறநூல்கள் எல்லாம் இதைத்தான் திரும்பத் திரும்பச் சொல்லுகின்றன. நமக்குத் தீங்கு இழைத்தவர்க்கு நாம் திரும்பத் தீங்கிழைக்கக் கூடாது.

''கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.''

பிறர் பகை கொண்டு நமக்குத் தீங்கு இழைத்தாலும், அதற்கு ஈடாக நாம் திரும்பத் தீங்கிழைக்கக்கூடாது. நாம் ஒன்றுமே செய்யாதிருக்க, நமக்கு வேண்டுமென்றே துன்பம் செய்தால் கூட, அதை அடக்குவதற்காகக்கூட திரும்ப நாம் தீங்கு செய்யக்கூடாது. இந்த இரண்டும் திருவள்ளுவர் போடும் 'இன்னா செய்யாமை' சட்டப் பிரிவுகள். 'ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தைக் காண்பி' என்பதன் பொருள் இதுதான். நமக்குத் தவறிழைத்த ஒருவரைத் தண்டிப்பதாக நினைத்துக் கொண்டு நாம் ஒரு தீங்கு இழைக்க, பதிலுக்கு அவன் நமக்கு ஒரு தீங்கு இழைக்க, அதற்குப் பதிலாய் மீண்டும் அவனுக்கு நாம் ஒரு துன்பம் விளைவிக்கப் போய், இது முடிவற்ற சங்கிலியாய்ப் போக, தீமைச் சூழலில் நாம் தாம் சிக்கிக்கொள்வோம். நமக்குத் தவறு செய்தவனை நாம் தண்டிக்கவே வேண்டா. அதனுடைய தவறே அவனைத் தண்டித்து விடும் (முன்னர்க் கண்ட வாலி வதத்திலும் இதைத்தான் நாம் பார்த்தோம்.)

இராவணன் இழைத்த தீமைகளின் சூழலைப் புரிந்துகொண்டதால்தான், அவனுக்குக் கடைசிவரைக்கும் சந்தர்ப்பம் தருகிறான் இராமன். போர் துவங்கு முன் அங்கதனைத் தூது அனுப்பிப் பார்க்கிறான். ஊஹூம். இராவணன் அசையவில்லை. பிறகு நிராயுதபாணியான போதும் கொல்லாது விடுகிறான். அப்போதும் திருந்தினானல்லன். உணர்வு துஞ்சிய

நிலையில் கொல்லாது விடுத்து, மரணத் தறுவாயில்கூட ஒரு சந்தர்ப்பம் வழங்குகின்றான். அப்போதும் ஆணவத்தின் களிப்பு சிறிதும் குறையாத இராவணன் இறங்கி வந்தானல்லன். தண்டிக்கும் முன்னர் மூன்று முறை சந்தர்ப்பம் கொடுக்கிறான், அதனால்தான் 'இன்று போய் நாளை வா' என்கிறான்.

## 'போர்க்கு வா'

இப்போது இரண்டாம் பகுதியைப் பார்ப்போம். 'போர்க்கு நாளை வா' என்றதும் இந்த அடிப்படையில் தான் என்றாலும், போர் புரிவதாயிருந்தால் நாளை என்றும் பொருள்படும், ஓகோ, போர் புரிவதில்லை யானால்? இன்றே வரலாம் என்று அர்த்தமா? போர் புரிவதில்லையென்றால் என்ன பொருள்? 'சீதையை விடுத்துச் சரணடைதல்' என்பதுதானே! அப்படிக்கூட இராமன் சந்தேகப்பட்டானா? ஆம். அதுவே சரி. யுத்த களத்திலிருந்து அரண்மனை புகுந்தவனிடத்தே மாலிய வானும், மகோதரனும் கேட்க, இராவணன்களத்தே நிகழ்ந்ததுரைக்கும் போது சொல்லியவற்றுள் சில வருமாறு :

.........'பழுது இலாத
பல் அலங்காரப் பண்பே காகுத்தன் பகழி மாதோ'
(7293)

.........'தாபதன் அம்புக்கு ஆற்றா
நொந்தனன் யான் அலாது ஆர் அவை நோற்ககிற்பார்'
(7394)

''அற்புத வில்லுக்கு, அம்பு எனக் கொளலும் ஆகா;
ஒப்பு வேறு உரைக்கல் ஆவது ஒரு பொருள் இல்லை;...
(7276)

...'வேதம்
தப்பின போதும் அன்னான் தனுஉமிழ் சரங்கள் தப்பா' (7297)

'...என்னைத் தீராத்
தற்பத்தைத் துடைத்த என்றால் பிறிதொரு சான்றும்
உண்டோ? (7298)

'வேய் எனத் தகைய தோளி இராகவன் மேனி நோக்கி
தீ எனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால்,
நாய் எனத் தகுதும் அன்றே; காமனும் நாமும்' (7301)

'நாசம் வந்துற்ற போதும் நல்லது ஓர் பகையைப்
பெற்றேன்' (7302)

இந்த இராவணனின் வாக்குமூலத்தை எல்லாம் கேட்டால் நமக்கே தோன்ற வில்லையா—இராவணன் சிந்திக்கத் தொடங்கிவிட்டான். 'மனிசன்' என்று இது வரை இகழ்ந்து பேசி வந்தவன், இப்போது அந்த 'மனிசனின்' ஆற்றலையே புகழத் தொடங்கியதோடு, தன் செருக்கையே அது துடைத்துவிட்டது என்றும் சொல்கிறான். ஆனால் மாலியவானின் நல்லுரையையும் மீறி, மகோதரன் மறுபடியும் துர்ப்போதனை செய்யவே இராவணன் மனம்மாறி கும்பகருணனைப் போருக்கு அனுப்ப முடிவுசெய்து விடுகிறான்.

அதனால் இராமன் எதிர்பார்த்ததில் தவறில்லை. போர் செய்யாமல் சரணாகதி அடைந்தாலும் அடையக் கூடும்; இன்னும் அதற்கு நேரமும் இடமும் இருக்கிறது. ஆகவே இப்போதும் ஒரு சந்தர்ப்பம் வழங்குவோம். பயன்படுத்திக் கொண்டால் சரி, இல்லாவிட்டால் போர்புரிய நாளை வரட்டும் என்பதுதான் இராமனின் நினைப்பு.

நல்கினன் : எதனை?

இந்தப் பொருளை இன்னும் உறுதிப்படுத்துவது தான் கம்பனின் பாடலின் பின் இரண்டு வரிகள்; பாடலை மீண்டும் பார்க்கலாமா?

"ஆள் ஐயா! உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த
பூளை ஆயின கண்டனை; இன்று போய், போர்க்கு
நாளை வா' என நல்கினன்—நாகு இளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்." (7271)

'இன்று போய், போர்க்கு நாளை வா' எனச் சொன்னவன்—இல்லை— 'நல்கினன்' யார் தெரியுமா? 'கோசலநாடுடை வள்ளல்' நல்குதல் என்றால் பொது வாகக் கொடுத்தல் என்றுதான் பொருள் படும். 'நாளை வா' என்று எதைக் கொடுத்தான் இராமன்? ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுத்தானா? இல்லை, மீண்டும் திருந்த ஒரு வாய்ப்பைக் கொடுத்து அதன் மூலமாக உயிரைக் கொடுத்தானா? 'நல்கினன்' என்ற சொல்லோடு 'வள்ளல்' என்ற சொல்லையும் சேர்த்துப் பார்த்தால் தெரியலாமோ? 'வள்ளல்' குணம் எது? தன்மை எது? உள்ளிய எல்லாம் உவந்து ஈதல் வள்ளன்மை. எவர்க்கும் இல்லை எனாது வழங்குதல் வள்ளன்மை. இப்போது 'நல்கினன்' என்ற சொல்லாட்சி யின் பொருத்தம் தெரியவருகிறது. கோசல நாடுடை வள்ளல் ஆகிய இராமன் கொடுத்தான். மறை பொருள் நயம்தான் யாது?

தேவியை விடுக! அல்லது ஆவியை விடுக!

இராமனுடைய வேண்டுகோள் என்ன?

"தேவியை விடுக!" அன்றேல், செருக்களத்து எதிர்த்து, தன்கண்
ஆவியை விடுக!" என்றான் அருள் இனம் விடுகிலாதான்.
(7604)

என்று இராவணனிடம் தூது சென்ற அங்கதன் உரைப்பான். தேவியை விடுவித்து, இராவணன் தன் உயிர் பெற வேண்டும், அல்லது தன் உயிரை முதலில் விட்டு, இராமன் தேவியை விடுவிக்க விடவேண்டும். இந்த இரண்டிலும் ஒன்று நிச்சயமானது. அதுதான் தேவி விடுதலை. இராவணனே தேவியை விடுவித்து, உயிர் பெற்றாலும், இராவணன் உயிரை விட்டு தேவியை இராமன் விடுவிக்க விட்டாலும் தேவி விடுதலையடைப்போவது சர்வ நிச்சயம். இதில் எதை இராவணன் முதலில் விடப்போகிறான்? ஏதாவது ஒன்றை இராவணன் விடத்தானே வேண்டும். அதில் மாற்றம் வேறு இல்லை.

இராவணன் தேவியை விட்டால், அவன் உயிர் அவனுக்கு மிஞ்சும். இது சரி; புரிகிறது. தேவியை விடாதபொழுது தன் உயிரை விட்டால், இராவணனுக்கு என்ன மிஞ்சும்? எது கிடைக்கும்? இராவணன் இவ்வுலக வாழ்வை இராமனால் நீத்தால் அவனுக்கு இதுவரை பட்ட துன்பங்கள் மிச்சம்; ஆம். அந்தத் துன்பங்களி லிருந்து விடுதலை கிடைக்கும்.

நாரதற்கேற்ப நயம்பட இசைத்தவன் இராவணன். வீணைக்கொடி உடைய கலா விற்பன்னன். ஈசனை இமையா முக்கண் இறைவனை பூசனை தவறாது செய்யும் பெரும் பக்தன். பெருந்தவ பலமும் வரபலமும்

பெற்றவன். ஆனால் என்ன இருந்து என்ன பிரயோஜனம்? கடைசியில் என்னென்ன கதிக்கு ஆளாகிறான்? தம்பியரை இழந்தான்; உறவை இழந்தான்; படை, துணை பலத்தை இழந்தான்; தன் புதல்வரை இழந்தான். தன் காதல் திருமகன், ஒப்பற்ற பெருவீரன் இந்திரசித்தன் தலையற்ற உடலை எடுத்துக்கொண்டு இலங்கை புகும்போது புலம்புகிறான். பாருங்கள் இராவணன் நிலையை!

> ...நேரிழை ஒருத்தி நீரால்,
> எனக்கு நீ செய்யத்தக்க கடன் எலாம், ஏங்கி, ஏங்கி,
> உனக்கு நான் செய்வதானேன்! என்னின் யார்
> உலகத்து உள்ளார்?' (9224)

பிள்ளை தனக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடனை எல்லாம், பிள்ளைக்கு ஒரு தகப்பன் செய்ய நேர்கிறது. அதுவும் இந்திரசித்தன் மாதிரி ஒரு பிள்ளைக்கு, இராவணன் மாதிரி ஒரு தகப்பன் செய்ய நேரிடுகிறது என்றால், இராவணன் பட்ட துன்பம் எவ்வளவு இருக்கும். இறுதியிலேகூட ''இராமன் தானோ வீடணன் சொன்ன அவ் வேத முதல் காரணன்''?என்ற ஐயம் வந்த போது கூட.

> ''யாரேனும் தான் ஆகுக! யான் என் தனி ஆண்மை
> பேரேன்...'' (9838)

என்று கடைசிவரை தான் ஒருவனாய்த் தனியே நின்று போரிட்டு இறக்கிறான். இவ்வாறு சோகமும், துன்பமும் அநுபவித்த இராவணனுக்கு இப் பிறவியிலிருந்து விடுதலை அளித்தால், அதுவும் இராவணனுக்கு 'நல்குதல்' தானே.

## இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல்

அறந்தலை நிறுத்தி, தீயோரைத் தண்டித்து, தக்கோர் இடர் துடைக்கிறான் பரம்பொருள். தீயவர்களைத் தண்டித்தல் என்றால் உலகினரின் கண்களுக்குத் தீயவர்களாகக் காணப்படுவோரைத் தண்டித்தல் என்றே பொருள். அந்தத் தண்டனை நம் கண்களுக்குத் தான் தண்டனையாகத் தோன்றுமே தவிர, உண்மையில் அத் தீயவர்களின் ஆன்மாவின் வளர்ச்சிக்குத்துணை செய்யக்கூடிய ஒரு அருட்செயலாகத்தான் அமையும். இனியவே செய்தார், இன்னா செய்தார் என வேறுபாடு பாராது, இருவருக்குமே இனியவே செய்யும் பான்மையினன் இறைவன். இனியவே செய்வார்க்குச் செய்யப்பெறும் இனியதுதான் 'தக்கோர் இடர் துடைத்தல்' இன்னா செய்தார்க்கும் செய்யப்பெறும் இனியதுதான், 'தீயோர் இறந்து உக நூறுதல்', இருவருக்கும் ஒரே மாதிரியான அருட்செயல்தான். நம்மைப்போன்ற உலகினர் கண்களுக்கு ஒன்று இடர் துடைத்தலாகவும், மற்றொன்று தண்டித்தலாகவும் தெரியும். இரண்டும் அருள்நிலையின் இருவேறு வெளிப் பாடுகள் தான். அவ்வளவே. இதைத்தான் அங்கதன் வாயிலாய் இராமனை 'அருள் இனம் விடுகிலாதான்' என்று சுட்டிக்காட்ட வைக்கிறான் கம்பன். அர்ச்சுனன் இது தெரியாமல்தானே கீதோபதேசம் பெற்றுத் தெளிந்து தன் பகைவர்களான உறவினரையும், பெரியோரையும் கொன்றான். உலகியல் பார்வையிலே அவன் கொலைகாரன் ஆனாலும், உள்ளுணர்வில் அவன் ஓர் அருளாளனாய் விளங்கினான். ஆன்மாக்களை இறைவனிடம் ஐக்கியப்படவைத்தான்.

**பொன்னும் பொற்கலனும் ஒன்றே :**

இதைத்தான் கம்பன் பிரகலாதனை வைத்துத் தெளிவுபடுத்துவான்.

'உன்னின் பிறிது ஆயினவோ, உலகம்
பொன்னின் பிறிது ஆகில, பொற்கலனே' (6300)

எத்தனை விதம்விதமான, வகைவகையான, பொன் நகைகளை நாம் பார்த்தாலும், அத்தனைக்கும் மூலம் பொன்தானே? அதே போல் உலகத்தில் எல்லாரும் பரம்பொருளின் வடிவங்கள்தாம். அவர்கள் வேறு, பரம்பொருள் வேறு அல்ல.

"ஆலமும் வித்தும் ஒத்து அடங்கும் ஆண்மையான்" (6262)

"வேலையும் திரையும் போல் வேறுபாடு இலான்" (6265)

வித்திலிருந்து மரமும், மரத்திலிருந்து வித்தும் உண்டாகின்றன; இரண்டிற்கும் மூலம் ஒன்றுதான். இரண்டும் பரம்பொருள்தாம். எப்படிக் கரையை நோக்கி வரும் அலைகள், கரையிலே மோதி மீண்டும் கடலொடு கலக்கின்றனவோ, அப்படியே பரம்பொருளிலிருந்து தோன்றும் சிருஷ்டிகள் திரும்பவும் அவனையே அடைகின்றன.

**வள்ளல்**

இராவணன் என்ற அலை கரையிலே மோதும் தருணம் வந்துவிட்டது. இனி அது தன் பிறப்பிடமான கடலுள் கலந்துவிடப் போகின்றது. அந்த விதத்தில் துன்பத்தை அநுபவித்துவிட்ட இராவண ஆன்மாவுக்கு இப்பிறவிப் பிணியிலிருந்து, தளையிலிருந்து விடுதலை நல்குகிறான் இராமன். இன்று போய் நாளை போருக்கு வந்தால் நிச்சயம் போரில் இராவணன் அழிந்து

படுவான். அழிந்து பட்டால் இராவணன் என்ற உடலை விட்டு அநாதியான உயிர் விடுதலைப் பேறு பெறும். இதை நல்குவதினாலே—வள்ளலாகிறான் பரம்பொருளின் அவதாரமாக மாறுவடிவில் வந்திருக் கிறான் இராமன்.

## மன்னிக்கிறவனே மனித மகாத்மா

நம்மைப் பொறுத்தவரையில், மனிதன் மகாத்மா ஆவதற்குரிய இரண்டாவது நிலை—பிறர் தவற்றை மன்னிப்பதே. தன் தவறுணர்ந்து வருந்துதல் மனமாசு களையப்பெறுவதற்கு முதல் நிலை என்றால், தன் குற்றம் போன்றதே பிறர் குற்றமும் என உணர்ந்து, அதனை மன்னிப்பது அடுத்த நிலையாகும். அப்படி யானால் இராவணனை அழித்தது அதற்கு முரணாக அல்லவா தெரிகிறது: இல்லையா? இல்லை, இராவணன் என்கிற அரக்கன் திருந்த எத்தனையோ முறை சந்தர்ப்பம் வழங்குகிறான், ஆனாலும் ஆணவத்தின் உச்சாணிக் கொம்பில் இருக்கிறவனுக்கு அது உறைக்க வில்லை. ஆகவே இப்பிறப்பில் இருந்து விடுதலையை 'தண்டித்தல்' என்ற பேரில் கிடைக்கச் செய்கிறான் இராமன். அதுவும் அவன் செய்த தவற்றை மறந்து மன்னித்ததால் தானே? மன்னிக்கிறவனே மனிதனி லிருந்து மகாத்மாவாக முடியும்.



# 4. கைகேயி வதம்

## கைகேயி வதமா?

மனிதன் மகாத்மா ஆவதற்குரிய முதல் நிலை தன் தவறு உணர்ந்து, வருந்துதல் என்றும், இரண்டாவது நிலை பிறர் தவற்றினை மன்னிப்பது எனவும் கண்டோம். வாலி வதமும், இராவண வதமும் இதற்கு உதவின. அடுத்தபடி என்ன? பிறர் தவற்றினை மன்னிப்பதோடு அவர்க்கே நன்மை செய்து விடலும் ஆகும்.

வள்ளுவன் வகுத்ததுதான் இந்த நெறி :

"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்."

இன்னா செய்தார்க்கும் இனியவே செய்வதுதான் சால்புடைமை என்ற சிறந்த பண்பு. ஆனால் அதனினும் ஒருபடி மேலே போய், இனியவே செய்வதைவிட, அவர் நாணும் படியாக அவர்க்கே ஒரு நல்லதைச் செய்தல் நன்று.

இந்த மூன்றாவது பாடத்தினை நாம் படிப்பதற்கு உதவப் போகிறது கைகேயி வதம் என்று சொன்னால், நீங்கள் முகம்சுளிப்பது எனக்குத் தெரிகிறது என்றாலும், வேறு வழியில்லை. வதம் என்றால் என்ன? அழித்தல் என்று பொருள்படும். கைகேயியை அழித்தானா இராமன்? ஆம். எப்படி என்று பார்க்கலாமா?

## மீண்டும் இரண்டு வரம்

ஜானகி அக்னிப் பிரவேசம் செய்த பின் அவளை இராமன் ஏற்றுக்கொள்கிற இடம். துறக்கத்திலுள்ள தயரதன் வந்து உண்மையை உணர்த்திவிட்டு, வாழ்த்தி 'உனக்கு வேண்டுவது கேள்' என்கிறான். உடனே இராமன் தயரதனிடம் இரண்டு வரம் கேட்கிறான். அவை என்ன தெரியுமா?

'தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்
தாயும் தம்பியும் ஆம் வரம் தருக!' (*10079*)

என்ன ஆச்சர்யம்! எவ்வளவு ஞாபகமும் அன்பும் இராமனுக்கு? தயரதன் இறக்கு முன்னர் கைகேயியைத் தன் தாரமில்லை என்றும், பரதனைத் தன் மகனல்லன் என்றும் சொல்லிப் போய்விடுகிறான். பதினான்கு ஆண்டுகள் உருண்டோடி விடுகின்றன. கைகேயி தயரதனுக்கு மனைவி அல்லள் என்றால் இராமனுக்குத் தாயாக முடியாது. பரதனும் அவ்வாறே சகோதரனாக முடியாது. தந்தை சொல் மிக்க மந்திரமில்லாதவன் இராமன். தந்தை சொல்லை மெய்ப்பிப்பதற்காகவே பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செய்தவன். ஆகவே இராமனுக்கு இது சங்கடமாக உறுத்திக் கொண்டே இருந்தது. அதனால் சந்தர்ப்பம் வாய்த்ததும் எவ்வளவு அற்புதமாக வரங்கேட்கிறான், பார்த்தீர்களா? நீங்களும், நானும் செய்ய முடியாத காரியம் இது.

## தீயள்

தயரதன் கைகேயியைத் 'தீயள்' என்று கருதி அவளைத் தன் தாரம் அல்லள் என்று துறந்து விடுகிறான். கைகேயி கேட்ட இரண்டு வரங்கள் என்ன?

'ஏய வரங்கள் இரண்டின், ஒன்றினால் என்
சேய் அரசு ஆள்வது; சீதை கேள்வன் ஒன்றால்
போய் வனம் ஆள்வது' எனப் புகன்று, நின்றாள்—
தீயவை யாவையினும் சிறந்த தீயாள்' (1504)

கொஞ்ச நேரம் முன்பு தான், உறங்கிக் கொண்டிருந்த கைகேயியை எழுப்பி கூனி உனக்கு இடர் வந்துள்ளது என்றதும், இதே வாய்—இதே கைகேயி என்ன சொன்னாள் தெரியுமா?

'விராவ அரும் புவிக்கு எலாம் வேதமே அன
இராமனைப் பயந்த எற்கு இடர் உண்டோ?' (1453)

என்றாள். நான் பெற்ற புதல்வன் இராமன் இருக்கையில் ஏது துன்பம் என்று கேட்ட ஆழ்ந்த பேரன்பினாள் கைகேயி, மனம் மாறி தயரதன் வரவிற்காக அலங்கோலமாகக் கிடக்கவும், தயரதன் வந்ததும் வினவ, வரந்தருவதாகச் சொன்னதைத் தரவேண்டும் என்று கைகேயி கேட்டதும், தயரதன் கூட என்ன பதில் சொன்னான், தெரியுமா?

'வள்ளல் இராமன் உன் மைந்தன் ஆணை' (1501)

அதே கைகேயி இதோ இப்போது சொல்கிறாள், என் சேய் அரசாள்வது என்று பரதனையும், வனமாள வேண்டியவன் 'சீதை கேள்வன்' என்றும் உண்மையான கோபங்கொண்ட ஒரு மாமியாரைப் போலவே. சீதை கணவனாகிய இராமன் என்று தள்ளி வைக்கிறாள். இப்போது எங்கே போயிற்று அந்த 'வேதமே அன இராமனைப் பயந்த' அன்பு? பரதன் 'அரசாள்வது'; சரி; புரிகிறது. அதென்ன 'வனமாள்வது?' அதற்கு விளக்கம் இராமனுக்கே தயரதன் இட்ட ஆணையாகப் பிறப்பிக்கும்போது சொல்லுகிறாள் ;

'தாழ் இருஞ் சடைகள் தாங்கி, தாங்க அருந்தவம் மேற்கொண்டு
பூழி வெங்கானம் நண்ணி, புண்ணியத் துறைகள் ஆடி' (1601)

ஓ, அடேயப்பா! இந்த வனம் ஆள்வது இவ்வளவு பெரிய வேலையா?

## சிறந்த தீயாள்

அதனால்தான் வரங்கேட்டதும் கம்பன் கைகேயிக்கு ஓர் அற்புதமான பட்டத்தைச் சூட்டுவான்.

'தீயவை யாவையினும் சிறந்த தீயாள்.' (1504)

இதற்கு விளக்கமே வேண்டாம் இல்லையா? (பதினான்கு ஆண்டுகள் கழித்து இராமன் அதே 'தீயள்' என்ற வார்த்தையைப் பெய்து கைகேயியைத் தன் தெய்வம் என்று மகுடாபிஷேகம் செய்கிறான்) கொஞ்சம் அவசரம். வேண்டாம் என்கிறீர்களா? புரிகிறது, புரிகிறது! 'சிறந்த தீயாள் யார்? ஏன்? என்று தானே! எப்படிச் சொல்லவேண்டும் நியாயமாக? 'தீயவை யாவையினும் தீய தீயாள்' என்று தானே? பிறகு அதென்ன 'சிறந்த தீயாள்' என்ற பிரயோகம்? பரதன் ஆண்டாலும் சரி, இராமன் காடு செல்லாமல் இருக்கச் செய் என்று தயரதன் எவ்வளவோ கெஞ்சியும், சற்றும் இறங்காத கைகேயியைக் கம்பன் 'தன் நேர் இல்லாத் தீயவள்' என்பான்.

சிலர் தமக்குக் கோபம் வருவதை 'எனக்குக் கெட்ட கோபம் வரும்' என்பார்கள். கோபமே கெட்டது, ¡கேடு பயக்கக் கூடியது. அதில் கெட்ட கோபம், நல்ல கோபம் என வேறு இருக்கிறதா, என்ன? இங்கே வரும் இந்த 'கெட்ட' என்ற சொல், கோபத்திற்கு அல்ல விளக்கம்

தரவல்லது; கோபத்தின் விளைவிற்கான விளக்கம். கோபத்தின் விளைவு கெட்டதாக இருக்கும் என்றால் அந்த அளவு கொடிய கோபம் வரும் என்று தானே பொருள்?

அதேபோல் 'சிறந்த தீயாள்' என்பதும் தீமையின் விளைவிற்கு விளக்கம் தரவல்லது. அதாவது தீமையின் விளைவு சிறந்ததே. எப்படி?

**'நல்லருள்' துறந்தாள் :**

கைகேயி மனம் மாறிய இடத்தே கம்பன் சொல்லுவான் :

'அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்
துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்' (*1484*)

அவளாகவா மாறினாள்? இராமனைப் பயந்தவள் என இறுமாப்புற்றிருந்தவள், ஆழமான பேரன்புடையவள் அவள் வெறும் கூனியின் மொழியால் உடனே மாறி விடுவாளா, என்ன? அரக்கர் செய்த பாவம் ஒருபுறம், அறவோர் செய்த புண்ணியம் மறு புறம் இயக்க, கைகேயி நல்லருளைத் துறந்தாள். கவனியுங்கள். அருளைத் துறக்கவில்லை. நல்லருளையே துறந்தாள். இந்த 'நல்லருள்' என்பதற்குப் பிறிதோர் இடத்திலே நல்ல விளக்கம் தருவான் கம்பன்.

கோபங் கொண்ட இலக்குவனைச் சமாதானப் படுத்தும் முகத்தான், இராமன் சொல்லுவான். 'நதியின் பிழை அன்று நறும்புனல் இன்மை.' அதேபோல் இது கைகேயி பிழை அன்று; 'விதியின் பிழை' என்பான். நறும்புனல் இன்மைக்கு விளக்கம் தரும்போது 'தண்ணீர் இல்லாதது. அதாவது வறண்டு போவது ஆற்றின் குற்றமன்று' என்றே சொல்லுவார்கள். நீரே இல்லை

யானால் அது நதியாகுமா? அப்படியானால் நறும்புனல் என்று 'நறும்' என்ற சொல் சேர்வது ஏன்? நல்ல நீர் இல்லாமை ஆற்றின் குற்றமன்று என்று பொருள் கொண்டால் அது நயமாக இருக்கும். அதாவது நதியில் நீர் ஓடிக் கொண்டிருக்கும். ஆனால் அதில் யாராவது கழிவுப் பொருள்களைக் கலக்கவிட்டால் அந்த நீர் நல்ல நீராக இருக்க முடியாது. அது ஆற்றின் பிழையா? இல்லை, அது அப்படி ஆற்றை, அதாவது ஆற்று நீரைக் கலக்கியவரின் குற்றம். நறும்புனல் என்றால் நல்ல நீர் என்பது போல் 'நல்லருள்' என்றால் தண்ணளி, என்று பொருள் கொண்டால் இப்போது தெளிவாகும்.

'இரக்கம் இன்மை அன்றோ, இன்று, இவ் உலகங்கள், இராமன் பரக்கும், தொல் புகழ் அமுதினைப் பருகுகின்றதுவே!' என்பான் கம்பன். இந்த 'நல்லருள்' துறந்ததே ஒரு நாடகம்தான்—கம்பன் கருத்தின் வண்ணம். அவதார நோக்கம் நிறைவேற வேண்டுமானால் இராமன் கானகம் செல்ல வேண்டும். அதற்கு வழி? கைகேயி அந்தப் புண்ணியத்தைக் கட்டிக்கொள்கிறாள். இல்லாவிட்டால் தன் கழுத்தைத் தானே நெறித்துக் கொள்ளுவது போல், தன் கொடுமையால் தான் மங்கலநாண் இழக்க நேரிடும் என்று தெரிந்தும் கடைசி வரையில் அதில் பிடிவாதமாக இருந்து இராமனைக் காட்டுக்கு அனுப்பி யிருப்பாளா? இதைத் தான் குலசேகர ஆழ்வார் பொறுக்க மாட்டாமல் உருக்கமாக வடித்துத் தருவார் :

"பொன் பெற்றார் எழில்வேதப் புதல்வனையுந்
தம்பியையும் பூவை போலும்
மின்பற்றா நுண் மருங்குல் மெல்லியல் என்
மருகியையும் வனத்தில் போக்கி,

நின்பற்றா நின்மகன்மேல் பழிவனைந்திட்டு
என்னையும் நீள் வானில் போக்க
என் பெற்றாய் கைகேயி! இருநிலத்தில்
இனிதாக இருக்கின்றாயே.''

கம்பன் இன்னும் உறைக்கிறாற்போல் சொல்லுவான்:

'மாயன் நெடுமையால் அன்று அளந்த உலகெலாம்
தன் மனத்தே நினைந்து செய்யும் கொடுமையால்
அளந்தாள்' (2370)

கைகேயி என்று. இதிலிருந்துதான் கொடுமை என்பதற்கு விளக்கமே பிற்காலத்தில் சொல்லுவார்கள். தன் மனத்தே நினைந்து செய்வதுதான் கொடுமை. மற்றவை எல்லாம் தவறுகள். நினைந்து செய்தால் தான் கொடுமை பொலியத் தோன்றுமாம். கடைசிவரையில் எங்கும் எப்போதும் இராமன் கைகேயியை நிந்தித்ததே இல்லை; ஓர் இடத்தில்கூட வசை கூறியது இல்லை. தீயள் என்று தயரதன் துறந்தவள் என்று தான்கடைசியில் குறிப்பிடுகிறான். அதில்கூட மீண்டும் சொல்லிப் பாருங்கள், இராமனின் உளப்பாங்கு விளங்கும். 'தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும், தீயள் இல்லை கைகேயி. 'தீயள் என்று நீ கருதித் துறந்தாய்' என்று தயரதன் பார்வையில் கைகேயி தீயளாகப் பட்டதை நாசுக்காகச் சொல்லிவிடுகிறான்.

'என் தெய்வம்'

அசோகவனத்திலே சிறை இருக்கும் சீதா பிராட்டியை அனுமன் சந்தித்துத் திரும்பும்போது இராமனுக்கு நினைவூட்டச் சில அடையாளச் செய்திகள் சொல்லும்போது சீதை சொல்லுவாள். 'என்னுடைய பிரியமான வளர்ப்புக் கிளிக்கு என்ன பெயர் வைக்கலாம் என்று முன்பு இராமனைக் கேட்டேன். அதற்கு அவர்

'மாசு அறு கேகயர் மாது, என் அன்னை, கைகேயி பெயர் வை' என்றார் என்கிறாள்.

இதிலிருந்தே இராமன் கைகேயியிடத்தில் கொண்டிருந்த பேரன்பு புலப்படவில்லையா? தயரதன் தனக்குத் தாரமில்லை என்று தள்ளிவிட்டதால், இப்போது அவளைத் தாய் என்று இராமன் கூப்பிட முடியாத நிலை. ஆகவே தாய் என்றும் சொல்லக்கூடாது. அதற்கும் மேலே சொன்னால்தன் பக்தியும் பேரன்பும் வெளிப்படும். அத்தகைய உணர்ச்சிக்கும் பங்கம் வராது. தாயினும் சாலப் பரிவுடையது தெய்வம்தானே? ஆகவே தான் கைகேயியைத் 'தன் தெய்வம்' என்கிறான். அதுமட்டுமல்ல, தெய்வத்தின் செயலில் நல்ல செயல், தீய செயல் என்ற பாகுபாடு உண்டா? அதை விமர்சிக்க நமக்குத் தகுதி உண்டா? முடியுமா? ஏனென்றால் தெய்வ காரியங்கள் விளக்கத்திற்கு அப்பாற்பட்டவை. கைகேயி தீயளாகக் காட்சி தந்து பழி கொண்டதும் அவ்வாறே விளக்க முடியாதது. அவனைப் பொறுத்த வரை அவள்தான் 'தந்தை, தாய், தெய்வம்' எல்லாம். ஆகவே தெய்வத்தின் தீர்ப்புக்கு முன்னே அது சரி தவறு என்று சொல்ல நாம் யார்? என்ற உணர்வை நமக்கு இராமன் இப்படி அழைப்பதால் உண்டாக்கிவிடுகிறான். தீயள் என்றால் 'சிறந்த' விளைவாகிய ராவண வதத்தைத் தந்த 'தீயள்' என்று உணர வைக்கிறான். அந்த வகையில் அவள் தீமை 'தன்நேர் இல்லாதது' தான். வேறெந்தத் தீமையாவது அந்த மாதிரி பயனளித்திருக்குமா?

**இன்னா செய்தாரை 'ஒறுத்தல்'**

"இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்தோ சால்பு."

''இன்னா செய்தாரை ஒறுத்தல், அவர் நாண
நன்னயம் செய்துவிடல்''.

என்று வள்ளுவ வாழ்க்கைநெறி ஒழுகுகிறவன் இல்லையா இராமன்? இராமனுக்கு வரவிருந்த அரசாட்சியைப் பதினான்கு ஆண்டுகள் தள்ளிப் போட்டு விடுகிறாள் கைகேயி. தன்னிடமிருந்து அரசாட்சியைப் பறித்த கைகேயியை, நாமாக இருந்தால் திரும்பி வந்ததும் முதல் காரியமாக நாடு கடத்தியிருப்போம். ஆனால் நிறை மனிதன் இராமனோ அவ்வாறில்லாமல் தனக்கு இழப்பை உண்டாக்கியவளுக்கு நேர்ந்த ''தயரதன் தாரமல்லள்'' என்ற இழப்பைப் போக்கிவிடுகிறான். அதைவிட ஓர் இனிய காரியத்தைக் கைகேயிக்கு யார் செய்ய முடியும்? கைகேயி தன் அடாத கொடிய செயலுக்கும் இதைவிட அவளை உணர வைக்கிற ஒறுத்தல்—தண்டித்தல் வேறு ஏதாவது இருக்க முடியுமா? இந்தத் தண்டனையைக் கைகேயி தன் வாழ் நாள் முழுவதும் மறக்க முடியாதே.

அதனால்தான் இராமன் இந்த இரண்டு வரங் களைக் கேட்டதும் ''வாய்திறந்து எழுந்து ஆர்த்தன, உயிர் எலாம், வழுத்தி'' என்பான் கம்பன்.

## கைகேயி வதமே

இராமனுக்கு முடி சூட்ட கைகேயி அனுமதித்திருந் தால், இராவண வதமாகிய அவதார நோக்கமாவது, நிறைவேறுவதாவது. தன் மகன், தன் அரசு, தன் கணவன், தன் மங்கல நாண் என்று கைகேயி தன்னலம் பார்த்திருந்தால்? அவள் அப்படித் தன்னலத்தைத் துறந்து, எந்தப் பெண்ணும் இழக்கத் துணியாத தன் மங்கல நாணையும் இழக்கத் துணிந்து 'இரக்கமின்மை யைக் காட்டிக் கொண்ட' தால்தானே இராமன்

பெரும் புகழ் அடைந்தான்? உலகோருக்குப் பயனுள்ள தான இராவணவதம் செய்தருளினான்.

உலகத்திக்கு ஒரு நன்மை விளைய வேண்டுமானால் அதற்கு யாரேனும் எப்போதேனும் பழி ஏற்கவே வேண்டியிருக்கும். உலக நன்மைக்காகவே நல்ல ஒரு காரியத்திற்காகவே செய்கிறோம் என்ற நினைப்பினாலேயே அந்தப் பழியைத் தாங்கிக் கொள்ளுகிற, தன்னையே கட்டுப் படுத்திக் கொள்கிற, தன்னையே வதைத்துக் கொள்ளுகிற வலிமை உண்டாகிவிடும். பெரிய ஒரு காரியத்திற்காக, பெரும் பணிக்காக ஓர் இழப்பைத் தான் தாங்கிக் கொள்ளலாம் என்றமுடிவுக்கு வந்துவிடுவார்கள். கைகேயி அரசரில் பிறந்து அரசரில் புகுந்தவள். நாட்டு நடப்பு தெரிந்தவள். இராமனின் கை வண்ணம் காட்டிய தாடகை வதம், கால் வண்ணம் காட்டிய அகலிகை சாப விமோசனம், பரசுராமன் செருக்கடக்கிய விதம் எல்லாமே அவள் மனத்திரையில் ஓடுகிறது. அந்த ஸ்ரீராமனை இப்போது ராஜ்ய பாரத்தில் உழல வைத்து விட்டால், பெரிய காரியமாம் அரக்கர் வதத்தை அவன் செய்ய முடியாது, அவன் தலையில் வேறு பொறுப்பு விழுந்துவிடும். எனவே அவன் உலகோருடன் தொடர்பு கொண்டு, உறவாடி, பகை வென்று வர அனுபவம் வேண்டும். அந்த அனுபவம் இல்லை என்று இப்போது நேரிடையாகச் சொன்னால் அது இராமனைக் குறைவு படுத்துவதாகும். எனவே பழியைத் தன் தலையில் போட்டுக் கொண்டு, தன்னையே வதம் செய்து கொள்ளுகிறாள்—பின்னால் இராமனுக்கு வரப்போகும் பெரும் பேற்றுக்காக. கைகேயி கொண்டிருந்த ஆழ்ந்த பேரன்பே இதற்குக் காரணம்.

வாலி வதத்தினால் உலகிற்கு ஒரு நன்மை விளைந்தது—தவறிழைத்தவன் தண்டிக்கப்பட்டான். இராவணவதத்திற்கு ஒரு முன்னேடியாய் விளங்கியது. நமக்கு 'தன் தவறுணர்ந்து வருந்தலே மன மாசு நீங்கி, மனிதன் மகாத்மாவாகும் முதல் நிலை' என்ற பாடம் கிடைத்தது.

இராவண வதத்தினால் உலகிற்கு ஒரு நன்மை விளைந்தது—தவறிழைத்தவன் தண்டிக்கப்பட்டான். நமக்குப் பிறர் தவற்றை மறந்து மன்னிப்பதே மனிதன் மேலும் வளரும் இரண்டாவது நிலை—என்ற பாடம் கிடைத்தது.

இந்தக் கைகேயி வதத்தினால் நமக்குக் கிடைத்தது என்ன? 'நமக்குத் தவறு இழைத்தவர்களையும் மன்னிப்ப தோடு அவர்களுக்கு நல்லது செய்து விடல்' என்ற மனிதனை மகாத்மாவாக்கும் மூன்றாவது நிலையாகிய பாடம் கிடைத்தது.

இராமன் நடந்து காட்டுகிற வழிப்படி நடந்தால், மனிதனும் மகாத்மாவாக விசுவரூபம் எடுக்கலாம்; அதற்கு இராமன் கைக்கொள்கிற மூன்று குணங்களை ஒவ்வொன்றாகப் பார்த்தோம். வாலி, இராவணன் கைகேயி—என்ற மூன்று பேரிடமும் இராமன் நடந்து கொள்ளும் நடைமுறைகளை வைத்து மூன்று குணங்கள் எவை எவை என அறிந்தோம்.

1. தன் தவறு உணர்ந்து வருந்துவது.
2. தனக்குத் தவறிழைத்த பிறரை மன்னிப்பது.
3. தனக்குத் தவறிழைத்தவரை மன்னிப்பதோடு, நன்மையும் செய்வது.

இந்த மூன்று குணங்களை, பண்பு நலன்களை இராமன் என்கிற மனிதன் கையாளுகிற இடங்களையும் சூழ்நிலையையும் தனித்தனியாகப் பார்த்தோம். இப்போது நமக்கு வேண்டுவது இந்த மூன்றும் எப்படி மனித நிலையிலிருந்து மனிதன் உயர, வளர உதவுகின்றன என்பதேயாகும். இராமன் காட்டிய வழி நமக்கு எப்படிப் பொருந்தி வருகிறது என்பதுதானே முக்கியம்?



## 5. அன்பு வெள்ளத்தில் உயரும் உள்ளம்

**இருக்கும் நிலை—மானுடம் :**

முதலில் மனித நிலை எது என்று நாம் தெரிந்து கொள்ள வேண்டும். நாம் எங்கே இருக்கிறோம் என்று தானே முதலில் பார்க்க வேண்டும். அப்போதுதான் எதை அடைய வேண்டும் என்ற குறிக்கோள், லட்சியம் பிறக்க உதவியாயிருக்கும் இல்லையா? இருப்பது என்ன என்று இருப்புத் தெரிந்தால்தான், இல்லாது என் னென்ன, அதனால் கூட்டிக்கொள்ள அல்லது வளர்த் துக்கொள்ள வேண்டியது என்னென்ன என்பது தெளி வாகப் புரியும்.

''புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரம் ஆகிப், பல் விருகம் ஆகிப் பறவையாய்ப் பாம்பாகிக், கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய், வல் அசுரர் ஆகி முனிவராய்த், தேவராய்ச், செல்லாஅ நின்ற இத் தாவர சங்கமத்துள் எல்லாப் பிறப்பும் பிறந்து...'' என்று மணி வாசகர் மனிதப் பிறவி எங்கே வாய்க்கிறது என்று காட்டுவார்.

பள்ளிக்கூடத்தில் பயிலும் பிள்ளைகளை அவர் களின் அறிவு வளர்ச்சிக்குத் தகுந்தாற்போல் வெவ்வேறு வகுப்புக்களில் பிரித்து வைத்திருப்பது போல், உயிர் களின் அறிவு விளக்கத்திற்குத் தக்கவாறு இறைவனும் புல், பூண்டு என்றும், புழு என்றும், மரம் என்றும், விலங்கு என்றும், பறவை என்றும், மனிதர்கள் என்றும்,

தேவர்கள் என்றும் பலபிறவிகளாய்ப் பிரித்து வைத்திருக்கிறான். இந்தப் பிறவிவரிசையில் முதல் தட்டில் உள்ளவை ஓரறிவு உயிர்கள். ஊறு என்ற ஒரே ஒரு புலனறிவு மட்டுமே உண்டு, புல், பூண்டுகளுக்கு. சுவை, ஒளி, ஊறு ஓசை, நாற்றம், என்னும் ஐந்து புலனறிவும் உடையவை ஐந்தாவது தட்டில் உள்ள விலங்குகள். பறவைகள் ஆறாவது தட்டில். பிறவிவரிசையின் கடைசியில் ஆறறிவுபடைத்த மனிதப் பிறவி. மனிதனாகப் பிறந்தபிறகு விளக்கம் பெற வேண்டியது பகுத்தறிவாகிய ஆறாவது அறிவுதான்.

இதெல்லாம் நம் அறிவுக்குத் தெரியும். சமயசாத்திர நூல்களில் படித்ததுதான் என்கிறீர்களா? ஆனாலும் அடிப்படையை விட்டு விட்டு, திடீரென்று நாம் மேல் படிக்குத் தாவ முடியாதே.

கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புல ஆற்றலையும்விட சக்திவாய்ந்த ஆற்றல் ஒன்று இருந்தால்தானே பிறவி விளக்கம் பெற முடியும். அது என்ன? பகுத்தறிவுக் களனாகிய மனம்தான் அது. பேராற்றல் படைத்த மனம் படைத்தவனே மனிதன். மனிதன் மனிதனாக வாழ்வாங்கு வாழ இந்த மனம் என்ற கருவியை நன்கு பயன்படுத்தத் தெரிந்திருக்க வேண்டும். அப்படி எல்லோரும் பயன்படுத்தி வந்திருந்தால் உலகத்தில் இன்றைக்கு இவ்வளவு குழப்பமும், கோளாறும் மலிந்திருக்குமா? பெரும்பான்மையினர் இன்பம் எங்கே என்றும் அமைதி எங்கே என்றும் தேடியலைவார்களா? ஆகவே மனிதர்களாக இருக்கிறோம். மனிதர்களாக வாழவில்லை என்பது தெளிவாகும். மனிதத்தோற்றம், வடிவம் இருக்கிறது; மனித உணர்வு இல்லை.

அடையும் நிலை—தெய்வம் :

இருக்கும் நிலை தெரிந்துகொண்டோம். பரிணாம வளர்ச்சியில் விலங்குநிலைக்கும் தெய்வ நிலைக்கும் இடையே இருக்கிறது மனித நிலை. மற்றைய பிறவி களின் நோக்கம் மனிதப் பிறவியை அடைவதற்கான, பக்குவத்தைத் தேடிக்கொள்வதுதான். ஆனால் மனிதப் பிறவியின் நோக்கமோ இறைவனோடு இரண்டறக் கலந்து இறைவனாகவே ஐக்கியமாகிவிடுவது.

இறை நிலை எது? இதோ வள்ளுவர் காட்டுகிறார் :

'வாலறிவன்'

'வேண்டுதல் வேண்டாமை இலான்'

'பொறிவாயில் ஐந்தவித்தான்'

'தனக்குவமை இல்லாதான்'

'அறவாழி அந்தணன்'

இவை எல்லாம் இறைமைக் குணங்கள்—தூய அறிவு, விருப்பு வெறுப்பு அற்ற நிலைமை, புலனடக்கம், தனக்கு நிகர் இல்லாத தன்மை, அறக்கடலாக விளங்கும் அருள் தன்மை. அடைய வேண்டிய குறிக்கோள், லட்சியம் இது தான்.

விசுவரூப சாதனம்—உள்ளம்

ஒரு அருமையான தியான ஸ்லோகம். இந்த இரண்டு நிலையையும், அதாவது இருக்கும் நிலையையும், அடைய வேண்டிய நிலையையும், இணைத்து வழி காட்டும்.

'அஸதோ மா ஸத்கமய
தமஸோ மா ஜ்யோதிர்கமய
ம்ருத்யோர்மா அம்ருதங்கமய'

'பொய்மையிலிருந்து வாய்மைக்கு
இருளிலிருந்து ஒளிக்கு
மரணத்திலிருந்து அமரத்தன்மைக்கு'

இந்த மனிதத் தன்மையிலிருந்து அந்த அமரத் தன்மைக்கு வளரும் வழி என்ன என்பது இனி நமக்கு முக்கியம். அதற்கு முன்னர் அந்த வழியில் நம்மைச் செலுத்தும் சாதனம் எது என்று அறிய வேண்டும்.

ஐம்புல அறிவுக்கும் அப்பாலாய் உணர்ந்து, அறிந்து வாழ உதவும் உள்ளமே, அந்தச் சாதனமாக முடியும். உள்ளத்தைப் பண்படுத்திப் பயன்படுத்துகிற விதத்தாலேயேதான் பயன் பெற முடியும். அதற்கு அறிவின் துணை வேண்டும்.

"சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின் பால் உய்ப்பது அறிவு"

மனம் போன போக்கில் போக விடாமல், தடுத்து நிறுத்தி, தக்க வழியில் செலுத்த வல்லது அறிவு ஒன்றே; அப்படியே அறிவு என்ற மூக்கணாங் கயிறு போட்டு இழுத்தாலும், சமயத்தில் சண்டித்தனம் பண்ணிக் கொண்டு ஓடாமல் நின்றுவிடும் இந்த மன வாகனம். ஏனெனில்,

"பலநல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர்
ஆகுதல் மாணார்க்கு அரிது"

அறிவின் துணை கொண்டு மனத்தை ஆள முயன்றாலும் எப்போதும் முயற்சி பலித்துவிடுவதில்லை. மனம் தீமையையே நாடி ஓடும்; நன்மையை நாடுவது கொஞ்சம் கடினமே.

பணமும், மனமும் எப்போதுமே நல்ல சேவகர்கள்; ஆனால் கெட்ட முதலாளிகள். நாம் அவைகளை ஆளுகின்ற வரைக்கும் நன்மையே பயக்கும்; ஆனால்

அவைகள் நம்மை ஆள இடங்கொடுத்து விட்டால், கேட்கவே வேண்டா—அவை நம்மைப் படுத்தும் பாட்டை.

அறிவுக் கடிவாளத்தினால் மனத்தைச் செலுத்த, அன்பு என்ற பண்பினால் பண்படுத்த வேண்டும். தட்டிக் கொடுத்துச் சரி செய்ய வேண்டும்.

மற்றோர் உயிரின் துன்பம் கண்டு கசிந்துருகுவதே அன்பின் வெளிப்பாடு ஆகும். அப்படிப் பிறர் துன்பம் உணர்வதுதான் அறிவின் பயன் என்பார்கள். தன் துன்பம் மறந்து பிறர் துன்பம் மட்டுமே உணர்வதுதான் அன்பின் பூர்ணமான வெளிப்பாடு. அங்கேதான் மக்கள் வாழ்க்கையும் மனமும் மிகவும் பண்பட்டிருப்பதாகச் சொல்லலாம்.

முன்பே நாம் பார்த்தோமே, அப்படி மனம் தூய்மை ஏற ஏறப் பிரகாசிக்கும்; தானும் விளங்கும்; பிறரையும் விளங்கச் செய்யும். மனத்துக்கண் மாசிலன் ஆகுதல் அறமாகும். இந்த அறந்தான் வாழ்கையின் பயனாகும் இல்லையா?

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல் வாழ்க்கை
பண்பும் பயனும் அது."

ஆக அன்பு என்ற பண்புடன் வாழ்ந்தால், அறம் என்ற பயன் விளையும். அறம் விளைந்தால் அதுவே மனம் தூய்மையாய் உள்ளதைக் காட்டும். மனம் தூய்மை யாய் இருந்தால் அதுவே மனம் சரியான வழியில் போகிறதென்பதைப் புலப்படுத்தும். அப்படிச் சென்றால் தான் மனிதத் தன்மையிலிருந்து உயர்ந்து மகாத்மா வாக முடியும்.

அன்பு கொண்டு பண்படுத்திய தூய்மையான மனமே, மனிதனை மகாத்மாவாக நிலை உயரச் செய்ய

முடியும், என்பது தெளிவாகிறதில்லையா? இங்கே இராமன் காட்டிய வழி எப்படி நமக்கு உதவும்?

தன் தவறு உணர்ந்து வருந்துதல், தனக்குத் தவறிழைத்தவரை மன்னித்தல், தனக்கு தவறிழைத்தவரை மன்னிப்பதோடு நல்லது செய்து நாணச்செய்தல் —இந்த மூன்றையும் இராமன் பின்பற்றினான் என்றால் அவன் மனமாசு இன்றி இருந்தான் என்பது புலப்படும்; மனமாசு களையப்பெற்றிருந்தான் என்றால் அன்பின் பூரண ஆளுகைக்குட்பட்டிருந்தான் என்பதும் பெறப்படும்.

## கரை காணா அன்பு வெள்ளம்

இந்த மாதிரி அன்பின் பூரண ஆளுகைக்குட்பட்ட நேர் முறை அணுகுதல் (Positive approach) எதுவும் செய்தானா இராமன்? செய்தானாவா? முதன் முதலில் செய்து காட்டி புரட்சி செய்தவனே அவன் தான்!

இளமையிலேயே இந்தப் பண்பைப் பெற்றிருந்தவன் இராமன். தம்பியருடன் ஆசிரியர் இல்லம் சென்று கற்றுத் திரும்பி வரும்போது, எதிர்ப்படும் மக்களைக் கண்டு, நின்று, அவர்களின் பல நலன்களையும் கேட்டு மகிழ்விப்பானாம்.

"எதிர் வரும் அவர்களை, எமையுடை இறைவன்
முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிரா,
எதுவினை? இடரிலை? இனிதுநும் மனையும்?
மதி தரு குமரரும் வலியர் கொல்?"... (311)

'என்ன வேலையாகப் போகிறீர்கள்? சிரமம் எதுவும் இல்லையே? வீட்டில் சுகமா? குழந்தைகள் நலமா?' என்று எதிர்ப்படுபவர்களைக் கேட்பானாம். அன்புப் பயிற்சி இங்கேதான் ஆரம்பம்.

எங்கே, இப்போது சொல்லுங்கள், இதை நாம் செய்கிறோமா? ரொம்பப் பெரிதாக வேண்டா. நாம் தினம் போகும் பஸ்ஸில் வரும் கண்டக்டரைப் பார்த்து 'என்ன சௌக்கியமா?' என்று கேட்டதுண்டா? 'என்ன ரெண்டு நாளாக முகவாட்டமாய் இருக்கிறதே' என்று கவலைப்பட்டுக் கேட்டிருக்கிறோமா? இதைக் கேட்பது கூடக் கடினமா?

இப்படி ஆரம்பித்த இராமன் எங்கே போய்விடுகிறான் தெரியுமா? காட்டிலே வேட்டுவ அரசன் குகன், கிஷ்கிந்தையிலே சுக்கிரீவன், இலங்கையிலே வீடணன் ஆகிய மூவரையும் உடன்பிறவாத் தம்பியராகவே சேர்த்துக் கொண்டு விடுகிறான். Universal brothehood என்று நாம் இன்றைக்குப் பெயரளவில் சொல்லிப் பயமுறுத்துகிறோமே, அந்த உலக ஆன்ம நேயத்தை ஸ்தாபித்தவன் இராமன்.

இராமன் சாப்பிடுவானா என்றுகூட அறியாது தன் முரட்டு அன்பினால் தேனும் மீனும் கொண்டுவந்து விடுகிறான் குகன். அதைப் பார்த்து இராமன் சொன்ன வார்த்தைகள் இருக்கின்றனவே, அவை உலக மகாக் காப்பியங்கள், இதிகாசங்கள் இவை எங்கு தேடினாலும் காண முடியாதன; "அரியதாம் உவப்ப உள்ளத்து அன்பினால் அமைந்த காதல் தெரிதரக் கொணர்ந்த என்றால், அமிழ்தினும் சீர்த்த அன்றே?" என்று அருகிலிருந்த வேதியர்களை நோக்கிக் கேட்கிறாற்போல இராமன் சொல்லுவான். மறுபடி சொல்லிப் பாருங்கள்;

"உள்ளத்து அன்பினால் அமைந்த காதல் தெரிதரக்
கொணர்ந்த
என்றால், அமிழ்தினும் சீர்த்த அன்றே?" (1679)

இதற்குப் பதிலையும் இராமனே சொல்லுவான், அமிழ்தத்தைவிடச் சீரிய ஒன்றினை ஏற்பது எப்படிப் பட்டது தெரியுமா? பவித்திரமானது. பரிவு என்றசொல் இருக்கிறதே, இது கம்பனின் கருவூல வார்த்தைகளில் ஒன்று. அதன் பொருளை அனுபவித்துத்தான் தெரிந்துகொள்ள முடியும்.

'பரிவினில் தழீஇய என்னில் பவித்திரம்' (1967)

அதனாலே 'நாமும் உண்டனம்' என்றருள் செய்கிறான் அருகிலிருக்கும் வேதியர்களிடம். அந்த அளவுக்கு அன்பினை வெளிப்படுத்துகிறான்.

'நின்னை இங்ஙனம் பார்த்த கண்ணை ஈர்கிலாக்
கள்வனேன்' (1969)

என்று கண்ணப்பனைப்போல் ஒப்பற்ற அன்பைக் காட்டிய குகனை உடனே,

'முன்புளம் ஒரு நால்வேம் முடிவுளதென உன்னா
அன்புள இனி நாம் ஓர் ஐவர்கள் உளரானோம்' (1995)

என்று தம்பியாய் ஏற்றுக்கொள்வதை திருமங்கை ஆழ்வார் பாராட்டுவதைப் பார்க்க வேண்டும்.

"ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது
இரங்கி மற்றவற்கு இன் அருள் சுரந்து
'மாழை மான்மட நோக்கி உன் தோழி;
உம்பி எம்பி' என்று ஒழிந்திலை; உகந்து
'தோழன் நீ எனக்கு இங்கு ஒழி என்ற
சொற்கள் வந்து அடியேன் மனத்து இருந்திட"...

என்று உருகுவார் திருமங்கையாழ்வார். 'தோழன் நீ' என்ற சொற்கள் வந்து அவர் மனத்து இருந்தனவாம்.

'தோழமை என்றவர் சொல்லிய ஒரு சொல் அன்றே?'
(2317)

என்றே கம்பனின் குகனும் கொள்கையாய்க் கொண்டு வாழ்கிறான்.

'சரண் உனைப் புகுந்தேன்; என்னைத் தாங்குதல் தருமம்'
(3810)

என்று வந்த சுக்ரீவனை உடனே ஏற்று,

'நீ என் இன்னுயிர்த் துணைவன்' (3812)
எனக்கொண்டான்,

வீடணனை ஏற்றுக்கொள்ளுகிற இடம் படித்துப் படித்து உருக வேண்டிய இடம்.

"குகனொடும் ஐவர் ஆனோம் முன்பு; பின், குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனோம் : எம்முழை அன்பின் வந்த
அகன் அமர் காதல் ஐய! நின்னோடும் எழுவர் ஆனேம் :
புகல் அருங் கானம் தந்து, புதல்வரால் பொலிந்தான்
நுந்தை" (6507)

தம்பியாய் ஏற்றுக்கொள்ளும் போது 'நுந்தை' என்று தயரதனை வீடணனுக்குத் தந்தையாக்கி விடுகிறான்.

இதையும் விட இன்னோர் புரட்சி செய்கிறான். புத்திர காமேஷ்டி யாகம் செய்து தயரதன் இராமனைப் பெற்றதே பிள்ளை இல்லாக் குறை தீர. ஆனால் அந்தத் தயரதனுக்கு இறுதிக் கடன்களை செய்ய இயலாது இராமனால் கானகம் போய்விடுகிறான். ஆனால் கானகத்தில் போன இடத்திலே தன் தந்தையின் பெரும் நண்பன், தன் தந்தையாகவே மதித்துப் போற்றிய 'சடாயு' என்ற பறவை அரசனுக்கு ஈமக் கடன் செய்கிறான். பிறிதோரிடத்தில் பேசுவான் ;

"சரண் எனக்கு யார் கொல்?' என்று சானகி அழுதுசாம்ப
'அரண் உனக்கு ஆவென்; வஞ்சி! அஞ்சல்!' என்றருளின் எய்தி,
முரணுடைக் கொடியோன் கொல்ல, மொய் அமர் முடித்து தெய்வ
மரணம் என் தாதை பெற்றது என் வயின் வழக்கு அன்று ஆமோ?" (6477)

இப்படியெல்லாம் போன இடத்திலே சகோதரர்களைச் சேர்த்துக் கொண்டது எவ்வளவு பெரிய பேரன்புச் செயல்? உலகம் ஒரு குடும்பம் என்ற கொள்கைக்கு வெற்றி இல்லையா? ஒரு வேடனையும்ஒரு வானரனையும் சகோதரனாக ஏற்கிற அளவுக்கு அன்பு பக்குவப்பட்டு விட்டது இராமனுக்கு; அதனால் தான் வாலிக்குத் தவறிழைத்த போது அதை ஏற்றுக்கொண்டு வருந்துகிற பக்குவமும் வந்தது.

தன் பகைவனின் சகோதரனையும் தன் சகோதரனாக ஏற்க முடிந்தது. தன் மனையாளைச் சிறையெடுத்த இராவணனுக்கும் பலமுறை உயிர்ப்பிச்சை நல்க முடிந்தது. தனக்குக் கொடுமை இழைத்த கைகேயியை மறந்து, அவளுக்கும் ஒரு நல்லதைச் செய்ய முடிந்தது.

தமக்கு உதவி செய்தவரிடத்தில் அன்பு செலுத்துவது எல்லாராலும் முடியும். உதவி செய்யாதவரிடத்திலும் அன்பு செலுத்துவது சிலரால் மட்டுமே முடியும். இன்னும் ஒரு நிலைமேலே போய், இன்னா செய்தாரிடத்தும் இனியவே செய்து ஒழுகுவதே மனத்தின் வலிமையும் தூய்மையும் ஆகும். அப்போதுதான்,

'எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணா செய்யாமை தலை'

என்றிருக்க முடியும்.

அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
தன் நோய்போல் போற்றாக் கடை?

என்பதும் சாத்தியமாகும். இப்படி எல்லா வழியிலும், அறத்தின் இயல்போடு இல்வாழ்க்கை வாழ்கின்றவனே வாழ முயல்கின்றவர்களுக்குள் எல்லாம் தலையானவன் என்பார் வள்ளுவர்.

'முயல்வாருள் எல்லாம் தலை'

என்பது கவனிக்கத் தக்கது. வாழ்கின்றவன் என்று சொல்ல வரவில்லை; வாழ முயல்கின்றவன் என்றுதான் சொல்கிறான். ஆகவே, அப்படி 'இயல்பினான் இல் வாழ்க்கை வாழ்வது' என்பது ஓர் ஓயாத தொடர்ந்த முயற்சி. அதற்கு முடிவே, எல்லையே கிடையாது என்பது பெறப்படும்.

'வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறைதெய்வ மாக' அன்பு பூண்டொழுக வேண்டும். அறந்தலை நிற்க வேண்டும். இதைவிட எளிது கம்பன் காட்டும் வழி. எது அன்பின் பாற்படும்? எது அறமாம்? என்று ஒவ்வொரு முறையும், ஐயப்பாட்டோடு முயல்வதிலும், இராமன் விட்டுப் போயிருக்கிற 'ரெடிமேட்' சூத்திரமே போதும். அயோத்தியில் பொது மக்களிடம் அன்பு காட்டித் தன் பயிற்சியைத் தொடங்கிய இராமன், அயோத்தியிலிருந்து புறப்பட்டு இலங்கையில் இராவணனை அழித்துத் திரும்புவதற்குள் எவ்வளவு பயிற்சியும், பக்குவமும் அடைகிறான்! குகனைக் காட்டிலே சகோதரனாக ஏற்கிறான். தந்தையாக ஏற்கிற பறவை சடாயுவுக்கு ஈமக்கடன் செய்கிறான். பிறகு வானர சுக்கிரீவனைச் சகோதரனாக ஏற்கிறான். வாலியிடம் தவறியதற்கு வருந்துகிறான். எந்த அரக்கர் குலத்தை வேரொடு ஒழிப்பேன் என்று சபதம் பூண்டானோ, அந்தக்

குலத்தில் பிறந்தாலும் உயர்ந்தவன் என்றதால் வீடணனையும் சகோதரனாக ஏற்கிறான்; இராவணனுக்கும் கருணை காட்டுகிற மனப்பக்குவம் வருகிறது, சிகரம் வைத்தாற்போல் கைகேயிக்கும் நன்மை செய்து விடுகிறான்.

இந்த மாதிரியான சந்தர்ப்பங்கள் நம் வாழ்க்கையிலும் எத்தனையோ தடவை வந்திருக்கும். அப்போதெல்லாம் நாம் இப்படி நடந்து கொண்டோமா என்று புத்தகத்தை மூடி வைத்துவிட்டு தயவு செய்து ஒரு முறை யோசியுங்களேன்; சரி நினைவுக்கு வரவில்லையா? பரவாயில்லை. இனிமேல் வரக்கூடும். அப்போதெல்லாம் சத்தியமாய் நீங்கள் செய்ய வேண்டியது :

1. உங்கள் தவறுகளை உணர்ந்து உரியோரிடம் வருந்துதல்

2. உங்கட்கு தவறிழைத்தவரை மன்னித்தல்

3. அவர்கட்கும் நல்லது செய்தல்

இதை ஒரு பிரதிக்ஞையாகவே, சங்கல்பமாகவே எடுத்துக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் இராமாயணம் படித்ததற்கு அர்த்தமே இல்லை. இதைச் செய்ய வேறொன்றும் வேண்டா. எப்போதும் அடிமனத்தில் அன்பு வெள்ளம் ஓடிக் கொண்டிருந்தாலே போதும். அப்போது நம் மனத்தில் விருப்பு, வெறுப்பு இருக்காது. கோபம், பொறாமை, பிடிவாதம், ஆணவம் போன்ற இழிவான உணர்ச்சிகள் நிச்சயம் தோன்றா. அப்படித் தோன்றாவிட்டால் பகையே இருக்காது. தவறே நிகழாது, எல்லோரும் நம்மை நேசிப்பார்கள். நம் உள்ளம் கரை காண முடியாத அன்பு வெள்ளத்தினால் உயர, உயர நாம் மகாத்மா ஆகிவிடலாம்.

○

# 6. மனிதன் இன்றும், என்றும்

## கடைப்பிடிக்க முடியுமா?

நீங்கள் சொல்வது எனக்கும் கேட்கிறது. "ஐயா, இதெல்லாம் இராமனால்தான் முடியும், ஏனெனில் அவன் தெய்வம். மனிதனாக அவதரித்தவன். அதனால் அவனால் எளிதில் கடைப்பிடிக்க முடியும். இதெல்லாம் இப்படிப்படிக்க, ஒரு சபாஷ் போட, உதாரணஞ் சொல்ல எளிதாய் முடியும். ஆனால் நம்மைப் போன்ற சாதாரண மனிதர்களால், அதுவும் தினம் ஒவ்வொரு க்யூவில் நின்று நின்று, அல்லல்படும் இயந்திர மனிதர்களிடத்தில் நிச்சய மாய் முடியாது" என்கிறீர்களா?

இராமாவாரத்தின் முக்கிய நோக்கமே மனிதன் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெல்வமாகலாம் என்று காட்டுவதே. மனித தெய்வமாக ஒரு மனிதன் ஆகலாம். ஆனால் அதைச் செய்து காட்ட தெய்வமே மனிதனாக வந்து அவதரித்து வாழ்ந்ததாலேயே, இந்தச் சந்தேகம் உங்கட்கு எழுவது நியாயமே. தெய்வ மனிதன் மனிதனாக வாழ்ந்ததால், மனிதன் மனித தெய்வமாக முடிந்தது. என்ன, குழப்பமாக இருக்கிறதா? நம் பாஷையில் சொல்லப் போனால் அவதார புருஷன் இப்படி யெல்லாம் வாழ்ந்து தெய்வமாகலாமே தவிர, சாதாரணமானவர்கள் இப்படி ஆவது சாத்திய மாகாது.

**காலத்தை வென்ற காவியம்**

இது உண்மையானால், அதாவது நாம் கடைப் பிடித்து ஒழுகுவது கடினம் என்பது உண்மையானால், இராமாயணம் காலத்தை வென்று, இவ்வளவு காலம் சிரஞ்சீவித் தன்மையுடன் நிலைத்து நின்றிருக்க முடியாது. வேறு எதுவும் பார்க்க வேண்டா. இன்றைய செய்தித்தாளை எடுத்துப் பாருங்கள், இன்றைக்கு எவ்வளவு இடத்திலே இராமாயணம் சொல்கிறார்கள் என்று; எத்தனை மாதங்களாகத் தொடந்து சொல் கிறார்கள் என்று. நமக்கே பிரமிப்பூட்டும். எங்கேனும் ஓரிடத்தில் தினம் இராமாயணம் தொடர் சொற்பொழி வாகவோ, கதா காலட்சேபமாகவே, நடந்து கொண்டு தானிருக்கிறது, கேட்கிறவர்கள் இல்லாவிட்டால் நடக்குமா? இது ஒன்றே காலத்தை வென்று நிற்பதற்கு மக்களின் பேராதரவுதான் காரணம் என்பதைப் புலப் படுத்தும். இதைத்தான் அழகாக ஆங்கிலத்தில் சொல்லு வார்கள், கனம் நீதிபதி மகராஜன் அவர்கள் : "His great poetry keeps its hold firmly on the centuries, because he gives poetic articulation to those timeless, probloms, which arise at all times and the answers to which will continue to fascinate the spirit of Man till the end of Time." எல்லாக் காலத்திலும் மனிதனுக்கு எழக்கூடிய பிரச்னைகளுக்குரிய, என்றும் ஈர்க்கக்கூடிய விடைகளுக்குக் கம்பன் தன்னுடைய கவி மேதா விலாசத்தால் அழகூட்டி இணைப்பதால், நூற்றாண்டுக் காலங்களாக இராம காதை நிற்கிறது.

**பேசாமல் பேசும் காவியம்**

வடநூலார் ஒரு பாகுபாடு செய்துள்ளனர். வெறும் நீதி நூல்கள், அறஞ்சொல்லும் நூல்கள், தலைவன் தன்

ஏவலாளருக்குக் கூறுதல் போன்றவை என்றும், புராணங்கள் நண்பர் ஒருவருக்கொருவர் கூறுதல் போன்றவை என்றும், காவியங்கள் காதலர் பேச்சுப் போன்றவை என்றும் பகுத்துள்ளனர். காதலர் வாழ்விலும், பேச்சிலும் உணர்ச்சிகளே ஆற்றல் மிக்கவை. சொற்களால் உணர்த்தலைவிடக் குறிப்பாலுணர்த்தல் மிகுதி என்பதும் தெளிவு. இராமாயணமும் அதுபோல் ஒழுக்கம், அறம் முதலியவற்றை நேரே சொற்களால் உணர்த்துவதை விடக் கற்பனையனுபவமும், கவிதை நயமும் கொண்டு உள்ளத்தில் தாமே பதியுமாறு செய்து விடுகிறது. கசப்பு மருந்தை இனிப்பு மிட்டாய்க்குள் வைத்துக்கொடுப்பது போல், அறத்தை எடுத்துரைப்பதை விட, அன்பால் உணரச்செய்து பதிய வைத்தல் பலன் மிகத் தரும் இல்லையா? ஆக தாமாகவே நம் உள்ளத்தில் பதிந்திருப்பதால் தான் நாம் விரும்புகிறோம்; இராமன் தலையில் வசிட்டன் முடி சூடிய போது தத்தம் தலையில் மௌலி சூடியதாக எண்ணினார்களாம். இன்றைக்கும் இராமபட்டாபிஷேகம் நடக்கும் இடங்களில் இக்காட்சி சர்வ சாதாரணமானது என்பதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

அன்றைக்குக் குலசேகரர் வாழ்விலும், இதுதானே நடந்தது. இராமன் வாழ்க்கை தம் வாழ்க்கையோடு ஒன்றியதனால்தானே அவரும் கதை கேட்கும் போதே, பொருக்கெனப் போருக்கு எழுந்தார்? இது தான் இராம காதையின் தனிச்சிறப்பு. நம்மிடம் பேசும்; நமக்கும் அறிவூட்டும்; ஆனால் நேரிடையாக அன்று, மறை முகமாக; "பகைவனுக்கும் அருள்" என்று நேரிடையாக உபதேசம் செய்யாது, இராமனின் ஒரு செயல் மறை முகமாக அதை நம்மிடம் பேசிவிடும்.

இப்படி நம்மோடும் நம் அன்றாட வாழ்க்கையோடும், இணைந்துவிட்ட இராமாயண நாயகன் இராமன் பின்பற்றியதையா நாமும் பின்பற்றுவது கடினம்? இராமனைப் பொறுத்தவரை முழுக்க முழுக்க மனிதனாகத்தான் நடந்து கொள்ளுகிறான்,

## இராமன் என்றொரு மானுடன்

சீதையிடம் சொல்லிக் கொண்டு கானகம் புறப்பட வருகிறான் இராமன். அவன் ராஜ்ய பாரம் துறந்தவன் என்றோ, கானகம் போகிறான் என்றோ வருந்தவில்லை.

''நீ வருந்தலை, நீங்குவென் யான்' என்ற
தீய வெஞ்சொல் செவிசுடத் தேம்புவாள்'' (1823)

சீதை,

'நின் பிரிவனும் சுடுமோ பெருங்காடு' (1827)

என்று வாதிடுகிறாள். எல்லையற்ற துன்பம் உண்டாகும் என்று எல்லாம் சொல்லி சீதை உடன் வருவதைத் தடுத்துப் பார்க்கிறான். உடனே சீதை பளிச்சென்று ஒரு போடு போடுகிறாள்.

''என்னைப் பிரிந்து வாழ்வதே இன்பம் போலும்'' (1834)

அவ்வளவுதான் இராமன், நம்மைப்போல் வாய் மூடி மௌனியாகி அவளைக் கானகம் அழைத்துச் செல்லக் கையை நீட்டினானாம்.

'பிறிதோர் மாற்றம் பெருந்தகை பேசலன்' (1834)

என்பான் கம்பன்.

மாரீசன் மாயமானாகி வந்ததும், சீதை பிடித்துத் தரச் சொல்லியும், இராமனும் இலக்குவனும் மாயமானோ என ஐயப்பட்டு, விவாதிக்கின்றனர். அதற்குள் சீதை பொறுக்காது,

"நாயக! நீயே பற்றி நல்கலை போலும்' என்னா
சேயரிக் குவளை முத்தம் சிந்திபு சீறிப் போனாள்" (3303)

சீதையின் இந்த சீறுதலும், புலவியும் நோக்கிய இராமன் உடனே தானே பற்றி வருவதாகப் புறப்பட்டு விடுகிறான். அதனால்தானே அத்தனைத் துயரமும்! சாதாரண மனிதனைப்போல் இரண்டு இடத்திலே இராமனும் 'வாங்கிக்கட்டிக் கொள்ளுகிறான்'.

"தேவியைப் பிரிந்த பின்னை திகைத்தனை போலும்,
செய்கை" (4020)

என வாலி சாடுகிறான். "சாதாரண மனிதனைப் போலவே பிரிவினால் தடுமாறி விட்டாயோ? இராமா" என்று கேட்கிறான். "அப்படித் தடுமாறியதால்தான் இப்படி என்னைக் கொன்றாயோ?" என்று இராமனைக் கேட்கிறான் என்றால் அதற்கு மேல் ஒருசான்று வேண்டுமா?

சடாயு இராமனை ஒரு அதட்டுப் போடுகிறான், பாருங்கள். இராமன் பெட்டிப் பாம்பாய் அடங்கி விடுகிறான். சீதையைத் தேடிக்கொண்டு இராம இலக்குவர்கள் வரும்போது வழியில் சடாயு குற்றுயிராய்க் கிடக்கிறான். இவர்களைக் கண்டதும், சடாயு நிகழ்ந்தவற்றை உரைக்கிறான். அவ்வளவுதான், இராமன் பொங்கி எழுகிறான். சீதையை அரக்கன் எடுத்துச் செல்வது கண்டு வாளாவிருந்த உலகத்தை அழிப்பேன்; வானவர்களை அழிப்பேன் என்று கோபத்தில் ஆரம்பித்து விடுகிறான். அப்போதுதான் சடாயுவிடம் 'வாங்கிக்கட்டி'க் கொள்கிறான்.

"வம்பிழை கொங்கை வஞ்சி வனத்திடை தமியள் வைக
கொம்பிழை மானின் பின்போய், குலப்பழி கூட்டிக்
கொண்டீர்,

அம்பு இழை வரிவில் செங்கை பயன்மீர்! ஆயும் காலை,
உம்பிழை என்பது அல்லால், உலகம் செய்பிழையும்
உண்டோ?'' (3536)

சரியான சாட்டை அடி! 'பெரிய வில்லைக் கையில் வைத்துக் கொண்டுள்ள இருவர், ஆண் பிள்ளைகள் நீங்கள், ஒரு பெண்ணைத் தனியே காட்டில் விட்டுவிட்டு ஒரு மானைப்பிடிக்கப் போனது யார் குற்றம்? உங்கள் குற்றமே!' என்ற சடாயுவின் ஒரு அதட்டலில் இராமன் அடங்கிப்போய், சீற்றம் தணிந்து விடுகிறான். இனிச் செய்வது என்ன என்று சிந்திக்கத் தொடங்குகிறான்.

சீதையைப் பிரிந்ததும், அவன் அடைகிற விரக தாபம், துயரம், வேதனை தான் எவ்வளவு?

நாகபாசத்தால் இலக்குவன் கட்டுண்டு கிடந்த போது போர்க்களத்தில் இராமன் அடைந்த துயரம் என்ன?

'கெடுத்தனை வீடணா' (8227)

என்றே சொல்லி விடுகிறான்.

இராமன் முற்றிலும் மனிதனாகத்தான் நடந்தான். அவன் நடந்து காட்டியதை நாம் பின்பற்றலாம். எனவே தான் மேற்சொன்ன—இராமன் மனிதனாக நடந்து கொண்ட—இடங்களைப் பார்த்தோம். இதெல்லாம் இருக்கட்டும், தவ முனிவர் காஞ்சிப் பெரியவர்கள் சொல்வதை, இதோ கேளுங்கள்:

''ஒரு நாடகம் நடக்கிறது. ராமாயண நாடகம் தான். அதில் லவ குசர்களை வால்மீகி, ராமனிடம் அழைத்து வருகிறார். ராஜபார்ட் ராமஸ்வாமி அய்யங்கார் ராமராக வேஷம் போட்டிருக்கிறார், அவருடைய சொந்தப்பிள்ளைகளே நாடகத்தில்

லவகுசர்களாக நடிக்கிறார்கள். நாடக ராமன் வால்மீகியைப் பார்த்து 'இந்தக் குழந்தைகள் யார்?' என்று கேட்கிறார். 'ராமஸ்வாமி ஐயங்காருக்குத் தன்னுடைய பிள்ளைகளையே தெரியவில்லையா' என்று நாடகம் பார்க்கிறவர்கள் கேலி செய்யலாமா? நாடக வால்மீகி இவர்கள் ராஜபார்ட் ராமஸ்வாமி அய்யங்காரின் பிள்ளைகள், நீங்கள்தானே அந்த ராமஸ்வாமி அய்யங்கார்' என்று பதில்சொன்னால் எத்தனை ரஸாபாஸமாக இருக்கும்? வாஸ்தவத்தில் இருப்பதை, வாஸ்தவத்தில் தெரிந்ததை நாடகத்தில் இல்லாததாக, தெரியாததாகத்தான் நடக்க வேண்டும். ஸ்ரீ ராமன் பூலோகத்தில் வாழ்ந்த போது, இப்படித்தான் மனுஷ்ய வேஷம் போட்டுக் கொண்டு, தம் வாஸ்தவமான சக்தியையும், ஞானத்தையும் மறைத்துக்கொண்டு வாழ்ந்தார்."

இதுதான் வானுறை தெய்வமே வையத்துள் வந்து, இருந்து, வாழ்வாங்கு வாழ்ந்து வானுறை தெய்வமாவது எப்படி என்று காட்டியதாகும். தெய்வமே மானுட வடிவில் வந்து காட்டிய வழியை நாம் பின்பற்றுவது இன்னும் சுலபமில்லையா?

"முடியுமா?"—இல்லை; "எப்படி முடியும்?"

ஆகவே, 'கடைப்பிடிக்க முடியுமா?' என்ற கேள்வி தானாகவே தீர்ந்துவிட்டது. வேண்டுமானால் "நாம் எப்படிக் கடைப்பிடிக்கலாம்" என்று கேளுங்கள்.

பழைய தியான ஸ்லோகம் ஒன்று சொல்லும்

"நரஸ்யாபரணம் ரூபம்;
ரூபஸ்யாபரணம் குணம்;
குணஸ்யா பரணம் ஞானம்;
ஞானஸ்யாபரணம் க்ஷமா"

ரூப, குண, ஞான, சௌந்தர்யங்களாகிய அனைத்திற்கும் அடிப்படி முதல் பொறுத்துக்கொள்ளுதலும், அதனால் வளரும் ஆற்றலுமேயாகும். ஆற்றல் வளருமா? ஆம். கம்பனின் இராமன் முதலில், மனம் தூயவனாகி, மாசு நீங்கி பிரகாசித்து முதலில் தன் குற்றத்தையும், பிறர் குற்றம் போல் அலசி ஆய்கிறான். தன் குற்றம் கண்டு வருந்தி வளர்வது, பிறர் குற்றம் காணாதிருக்க வழிவகுக்கும். அதுமட்டுமல்ல, ஒரு பேருண்மையையும் நமக்கு உணர்த்தும். ஒரே நாளில் மனிதன் தெய்வமாகி விட முடியாது. முயற்சி செய்துதான் வளரமுடியும். இதைத்தான் வள்ளுவரும் "முயல்வாருள் எல்லாம் தலை" என்று சுட்டிக்காட்டுகிறார். ஒரு தொடர்ந்த ஓய்வில்லாத முயற்சி. இன்று கடைப்பிடித்தது போதும் என்று விட்டுவிட முடியாது. இன்று மட்டுமல்ல, இனி என்றும் கடைப்பிடித்து ஒழுகினால், தானே வரும் வளர்ந்த நிலை அது. எல்லாவற்றையும், ஒன்றாகவும் கடைப்பிடிக்கவும் முடியாது. ஒவ்வொன்றாகத்தான் கடைப்பிடிக்க முடியும்; ஒவ்வொரு நிலையாகத்தான் வளர்ச்சி இருக்கும். மொத்தமாக ஒரே நாளில் வளர்ந்தால் அது விகாரமாக, வீக்கமாக ஆகி வெடித்துவிடும்.

கார்டினல் நியூமன் சொல்வதுபோல்,

"One step enough for me" என்றாலே போதும்;

"Lead, Kindly light, amid the encircling gloom
lead thou me on;
Keep thou my feet, I do not ask to see
The distant scene, one step enough for me."

ஒவ்வொரு அடியாக எடுத்து வைப்போம். அப்படி ஒரு குணத்தைக் கடைப்பிடித்தாலே மீதி தானாக வரும். ஒரு படியில் ஏறியதும் அடுத்த படி தானாகவே

புலப்படும். ஒரு பண்பைக் கைக்கொண்டால் அடுத்த பண்பு தானாகவே பற்றிக்கொள்ள வரும். ஒரு அடி எடுத்து வைத்தால் மீதி வழி தானே தெரிய வரும். இப்படி ஒவ்வொரு நிலையாக வளர்வதுதான் இயற்கை நியதியும்கூட. மனிதத் தோற்றத்திலிருந்து மனிதனாக, மனிதனிலிருந்து மகாத்மாவாக. மகாத்மாவிலிருந்து மாமறை போற்றும் தெய்வமாக நாம் ஒவ்வொருவரும்— ஆம், கம்பனையும், கன்னித் தமிழையும் கற்றவர்கள்— கம்பன் காட்டும் விசுவரூப ஒளியில் வளர்ந்து விசுவரூப மெடுப்போமாக!



## நில்லுங்கள்!, ஒரு நிமிடம் ...

படித்துவிட்டீர்களா? நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டியது இன்னும் ஒன்று உள்ளது.

நான் இதுவரை உங்களுடன் 'பேசிக் கொண்டே' வந்த இந்த விசுவரூப விஷயம் ஏதோ பெரிய இலக்கிய விமரிசனம் என்றோ, என் அரிய ஆராய்ச்சி என்றோ கருதி விடாதீர்கள். அதற்காகவேதான் இந்நேரம் உங்களுடன் 'பழகு தமிழில்' பேசி வந்தேன். ஏனென்றால் இது கம்பன் எனும் கடலில் நான் கண்டெடுத்த அநுபவபூர்வமான உண்மை. நான் உணர்ந்த இந்த உண்மையை நீங்களும் அறிய வேண்டும்; அறிந்து பலன் பெற வேண்டும் என்ற ஒரே உந்துதல்தான் என் மலட்டுத் தன்மையை நீக்கியது. நன்றி.

—பழ. பழநியப்பன்